# செந்தமிழ்ச் செல்வி

ACC-NO-38099



கழக ஆட்சியாளர்

வ. சுப்பையாபிள்ளை

## முத்துவிழா

சிறப்பு மலர்

சிலம்பு-௫௨] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௮ புரட்டாசி. (Oct. 77) [பரல்- ௨

## கழக ஆட்சியாளர் முத்துவிழா (7—10—1977)



திருக்குடமுழுக்குத் துவக்கம்



திருக்குடமுழுக்கு நிறைவின்போது தம் குடும்பத்தாருடன்



சிவத்திரு தேசிகர் இறைவழிபாடுசெய்து புத்தாடைவழங்கல்



நம் மனைவி மங்கையர்க்கரசியாரர்க்கு மங்கலநாண் அணிவித்தல்



விழாவில் கலந்து கொண்ட மறைமலையடிகளார் குடும்பத்தாருடன்

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருஉ | திருவள்ளுவர் ஆண்டு உ০০அ, புரட்டாசி<br>அக்டோபர் 1977 | பரல் உ |
|---|---|---|


## முத்துவிழாக் காணும் கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வரின் தனிப்பெருந் தமிழ்ப்பணி

பைந்தமிழ்ப் பண்ணையாக விளங்கும் சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தின் ஆட்சியாளர் தாமரைச் செல்வர் அவர்கட்கு எண்பது அகவை நிறைந்துள்ளது. இவ் வாண்டு தாமரைச் செல்வரின் முத்துவிழா ஆண்டாகும். இற்றைக்கு ஐம்பத்தேழு ஆண்டுகட்கு முன்னர்க் கழகத்தை நிறுவி இருபத்து நான்கு ஆண்டுக்காலம் அதன் அமைச்சராக இருந்து அரும்பணியாற்றிய செம்மல் திருவரங்கனர் அவர்களைத் தமையனராகப் பெறும் பேறு பெற்ற தாமரைச் செல்வரவர்கள் கழகம் தொடங்கிய காலம் முதல் தம் அருமைத் தமையனருக்கு நற்றுணையாகச் சென்னைக் கிளை முகவராக இருந்து பணியாற்றியதுடன் அவர்கள் மறைவுக்குப்பின்னர் 1944இல் கழகத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்று இன்றுகாறும் அதனை வளம்பெற வளர்த்து நலம்பெற நடத்தி வருகின்றார்கள். இத்திருமகனர் ஒடுங்கா உள்ளத்தொடும் ஓவா முயற்சியொடும் ஆற்றியுள்ள அரும்பணிகள் பலப்பல.

**பழந்தமிழ் நூல்கள் :**

தமிழ் மக்களின் சிறப்பெல்லாம் தமிழையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. பழந்தமிழ் இலக்கண இலக்கியங்கள் ஒப்பற்ற செல்வங்களாகும். அவை யாவற்றையும் உரை விளக்கங்களுடன் அழகுற அச்சிட்டும் செப்பமாகக் கட்டடம் செய்தும் வெளியிட்டுள்ள பெருமை கழகத்தையே சாரும். வருவாயையே கருதாது எளிதில் விற்பனை யாகாத அரிய நூல்கள் பலவற்றைக் கழகம் வெளியிட்டுள்ளது. தமிழ்நூல் எதுவாயினும் கழகத்தில் கிடைக்கும் என்று யாவரும் கருதுமளவிற்குக் கழகத்தின் பணி சிறந்துள்ளது.

திருக்குறட் பணி :

தன்னிகரற்ற தமிழ் மறையாகவும் உலகப் பொதுமறை யாகவும் விளங்கும் திருக்குறளைப் பரப்புவதில் கழகம் தனி முயற்சி எடுத்துக் கொண்டுள்ளது. பல்வேறு வடிவில் திருக்குறள் மூலம், உரைகள், ஆராய்ச்சிகள், விளக்கங்கள், மொழி பெயர்ப்புகள் முதலியவற்றையும் திருவள்ளுவர் படத்தையும் வெளியிட்டிருப்பதுடன் திருவள்ளுவர் மாநாடு, திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டுவிழா ஆகியவற்றையும் நடத்தியுள்ளது. திருக்குறள் தெளிவுரை ஆசிரியர் (மு. வ.) நினைவுப் பரிசுத் திட்டம் ஒன்றையும் நிறுவியுள்ளது. திருக்குறள் நாட்காட்டி, திருக்குறள் நாட்குறிப்பு ஆகியவற்றைப் பல்லாண்டுக் காலமாகத் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றது.

மறைமலையடிகளார் :

இற்றைத் தமிழ் எழுச்சிக்கும் தமிழ் மக்களின் விழிப்புக்கும் அடிகளாரின் அறிவுப் புரட்சியே அடிப்படைக் காரணமாகும். கழகம் அடிகளார் வகுத்த நெறியில் நின்று செந்தமிழுக்கும் சிவநெறிக்கும் பணியாற்றி வருகின்றது. அடிகளார் நூல்களைப் பொலிவாக அச்சிட்டுத் தொடர்ந்து வெளியிட்டு வருவதோடு அவர்கள் விருப்ப ஆவணப்படி அவர்கள் வாழ்ந்த வளமனையைக் கலைமன்ற மாக்கியும் சென்னையில் மறைமலையடிகள் நூல் நிலையம் அமைத்தும் அடிகளார் புகழையும் கருத்தையும் ஒருங்கே பரப்பி வருகின்றது.

செந்தமிழ்ச் செல்வி :

திங்களிதழான ‘செந்தமிழ்ச் செல்வி’ கழக வெளியீடாக ஆட்சியாளர் அவர்களை ஆசிரியராகக் கொண்டு கடந்த ஐம்பத்தோர் ஆண்டாக வெளிவருகின்றது. செல்வியின் தொகுதிகள் யாவும் ஆராய்ச்சியாளர்கட்கு அரிய கருவூலமாகக் கலைக்களஞ்சியமாகப் பயன்பட்டு வருகின்றன.

ஐங்கணி :

திருக்குறள் நாட்காட்டி, திருக்குறள் நாட்குறிப்பு ஆகிய வற்றை ஆண்டுதோறும் வெளியிட்டுவரும் கழகம் சைவப் பஞ்சாங்கம் என்னும் பெயரில் ஐங்கணி ஒன்றையும் பல்லாண்டுக் காலமாகத் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றது.

ஆட்சிமொழியும் பயிற்றுமொழியும் :

தமிழ்மொழி ஆட்சிமொழியாகவும் பயிற்று மொழியாகவும் வளம்பெற்றும் வளர்ச்சியுற்றும் விளங்கும் வகையில் அகர முதலிகள் பலவற்றையும் துறைதோறும் பற்பல நூல்களையும்

கழகம் வெளியிட்டுள்ளது. தமிழ் ஆட்சிமொழியாகவும் பயிற்று மொழியாகவும் ஆவது பற்றிச் சில தடைகளும் சிக்கல்களும் எழுந்தபோது அறிஞர் பெருமக்களிடம் கருத்துகளைப் பெற்றுக் கழகம் வெளியிட்டுள்ளது.

வழிபாட்டு மொழி :

வழிபாட்டு மொழியாகத் தமிழ் வழங்கும் வண்ணம் மலர் வழிபாட்டு வரிசை, புகழ்நூல் வரிசை, கடவுள்நூல் வரிசை முதலிய நூல்களைக் கழகம் வெளியிட்டுள்ளது.

அறமன்ற மொழி :

தமிழ் அறமன்ற மொழியாக்கப்படும் பொருட்டு, சட்ட வியல், சட்டத்தமிழ், தீங்கியல் சட்டம், சட்டமன்ற நடைமுறை ஆகிய நூல்கள் கழகவழி வெளியிடப்பட்டுள்ளன. மற்றும் பலவும் வெளியிடப்பட விருக்கின்றன.

தமிழ்க் காப்புப் பணிகள் :

மறைமலையடிகளார் எழுதிய 'இந்தி பொது மொழியா' என்ற நூலைப் பல ஆயிரம் படிகள் அச்சிட்டு வெளியிட்டுள்ளது. தமிழுக்கு ஊறு நேரும் வகையில் இந்தி இந்தியாவின் பொது ஆட்சிமொழியாக முயன்றபோதெல்லாம் கழகம் அதனைத் தடுத்து நிறுத்தும் பணியில் முனைந்து செயலாற்றி யுள்ளது. துண்டு வெளியீடுகள், தமிழ்க்கொடி முதலியவற்றை வெளியிட்டுள்ளது.

பெயர் மாற்றம் :

வேற்றுமொழிப் பெயராகவும், தமிழ் வழக்கிற்கு இசையாத பெயராகவும் இருந்த ஊர்ப் பெயர்கள் பலவற்றைத் தமிழ்ப் படுத்தக் கழகம் முயற்சி எடுத்துக் கொண்டது. தொடர்வண்டி நிலையப் பெயர்கள் பல இம் முயற்சியால் மாற்றம் பெற்றன. மக்களின் பிறமொழிப் பெயர்கள் மாற்றத்துக்கும் 'மக்கட் பெயர் அகரவரிசை' அச்சிட்டு வெளிப்படுத்தி யுள்ளது.

நாடகத் தமிழ் :

இயற்றமிழ் நூல்கள் பலவற்றையும், இசைத்தமிழ் நூல்கள் சிலவற்றையும் வெளியிட்டுள்ள கழகம் நாடகத் தமிழுக்கும் நற்பணி யாற்றியுள்ளது. நாடக நூல்கள் பலவற்றை வெளியிட்டிருப்பது மட்டுமன்றித் தமிழில் புதுமை நாடகம் ஆக்கிய பேராசிரியர் மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை அவர்கள் பெயரில் ஒரு பரிசுப் போட்டித் திட்டம் வகுத்து 'அனிச்ச அடி' என்னும் நாடகத்தை வெளிப்படுத்தி யுள்ளது. அடுத்து 'ஊமைக் குயில்' என்னும் நாடக நூலையும் அச்சிட்டு வெளியிட்டுள்ளது.

வரலாறு :

சங்கநூற் புலவர் வரிசையில் 16 நூல்களும், சங்ககால அரசர் வரிசையில் 6 நூல்களும் கழகம் வெளியிட்டுள்ளது. தமிழ்ப் பெருமக்கள், உலகப் பெருமக்கள் பற்பலர் வரலாற்றையும் பல தொகுதிகளாக வெளியிட்டுள்ள கழகம், நாட்டு வரலாறு, இனவரலாறு பற்றிய நூல்களையும் வெளியிட்டுள்ளது.

அறிவியல் நூல்கள் :

பல்துறை நூல்களையும் வெளியிட்டு வரும் கழகம் வளர்ந்து வரும் அறிவியல் நூல்கள் பலவற்றையும் வெளியிட்டுள்ளது. நரம்பு மருத்துவம், வாய் பல் மருத்துவம், கண் மருத்துவம் முதலிய மருத்துவ நூல்கள் சிறப்புற வெளியிடப்பட்டுள்ளன. பழவளம், காட்டுவளம் முதலிய நூல்களும் வெளிவந்துள்ளன.

ஆங்கில நூல்கள் :

தமிழின் சிறப்பு உலகெலாம் பரவும் பொருட்டு அரிய பல ஆங்கில நூல்களையும் கழகம் வெளியிட்டு வருகின்றது.

மொழி பெயர்ப்புகள் :

கழகம் தமிழ் பல்துறையிலும் வளம்பெறும் பொருட்டுப் பிறமொழி நூல்களில் சிறந்தனவற்றை மொழிபெயர்த்தும் வெளியிட்டு வருகின்றது.

குழந்தை நூல்கள் :

அறிஞர்கட்கும் ஆராய்ச்சியாளர்கட்கும் பயன்படும் வண்ணம் அரிய பல நூல்களையெல்லாம் வெளியிட்டு வரும் கழகம் சிறுவர்கட்குப் பயன்படுமாறு பாவடிவிலும், உரைநடையிலும் பல நூல்களை வெளியிட்டுள்ளது.

முதியோர் கல்வி :

முறையாக இளமையிற் கல்லாதவர்கள் பிற்காலத்தில் கல்வியின் சிறப்பையுணர்ந்து பயிலுதற்கேற்பப் ‘படியாதார் படும்பாடு’ முதலிய நூல்களையும் தமிழரல்லாதார் தமிழ் கற்றற்கேற்பத் ‘தானே தமிழ் கற்கும் முறை’ முதலிய நூல்களையும் கழகம் வெளியிட்டுள்ளது.

அகரவரிசைகள் :

துறைதோறும் துறைதோறும் தமிழ் வளம்பெற வேண்டுமாயின் பற்பல அகரமுதலிகள் இன்றியமையாது வேண்டப்படும். ஆகவே கழக ஆங்கிலத் தமிழ் அகராதி, தமிழ் ஆங்கில அகராதி, வடசொற்றமிழ் அகரவரிசை, கழகத் தமிழ் அகராதி, பல்பொருள் ஆங்கிலத் தமிழ் அகராதி, தொகையகராதி, சிறப்புப் பெயரகரவரிசை, சிலேடை அகரவரிசை முதலியவற்றோடு

பிங்கல நிகண்டு, சேந்தன் திவாகரம் ஆகியவற்றையும் கழகம் முயன்று தொகுத்து வெளியிட்டுள்ளது.

மாநாடுகள் :

தமிழ்ப் புலவர் மாநாடு, தமிழுணர்ச்சி மாநாடு, மெய் கண்ட சாத்திர மாநாடு முதலிய மாபெரும் மாநாடுகளைக் கழகம் முனைந்து நின்று நடத்தியுள்ளது.

பெருவிழாக்கள் :

கழகத்தின் 1008 ஆவது நூல் வெளியீட்டு விழா, கழகப் பொன்விழா, திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டுவிழா, ஆட்சியாளர் பவளவிழா, மறைமலையடிகள் நூற்றாண்டு விழா, செந்தமிழ்ச் செல்வி பொன்விழா ஆகிய பெருவிழாக்கள் கழகத்தினால் சிறப்புற நடத்தப்பட்டன.

மலர் வெளியீடு :

மேற்காணும் விழாக்களிலெல்லாம் சிறப்பு மலர்கள் அரிதின் முயன்று வெளியிடப்பட்டுள்ளன. அன்றியும் தமிழ், தமிழ்நாடு தொடர்பான சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறுங் காலங்களில் செந்தமிழ்ச்செல்வி மலராக வெளியிடப்பட்டுள்ளது.

இலக்கிய மாநாடுகள் :

பத்துப்பாட்டு மாநாடு, எட்டுத்தொகை நூல்கட்குத் தனித்தனி மாநாடுகள், சிற்றிலக்கிய மாநாடுகள் முதலிய பல இலக்கிய மாநாடுகள் நடத்தி மாநாட்டுச் சொற்பொழிவுகளை நூல் வடிவாக்கிக் கழகம் வெளியிட்டுள்ளது. தமிழ் நூற்பதிப்புத் துறையில் இஃது ஒரு புது முயற்சி என்பதில் ஐயமில்லை.

சமய வகுப்பு :

கழகம் நெல்லையில் சிவஞானபோத வகுப்பு ஒன்றை இருபத்தொரு நாட்கள் சிறப்புற நடத்தியது. சமயத்திலும் தமிழிலும் ஈடுபாடுடைய அறிஞர் பலரும் இவ் வகுப்பிற் சேர்ந்து பயின்று பயன் பெற்றனர்.

சமய நூல்கள் :

சிவநெறிக்கு அடிப்படையான பன்னிரு திருமுறைகள், பதினன்கு மெய்கண்ட நூல்கள் ஆகியவற்றைச் சிறப்பாகக் கழகம் வெளியிட்டுள்ளது. கழகத்தின் 1008 ஆவது வெளியீடாகப் ‘பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு’ என்னும் தொகுப்பு நூலும், பொன்விழாவில் ‘திருத்தொண்டர் மாக்கதை’யும் ‘பொன் வண்ணத் தந்தாதி’யும், ‘Grand Epic of Saivism’ என்னும் ஆங்கில நூலும், ‘பெரியபுராணச் சொற்பொழிவு’ நூலும் சிறப்பு வெளியீடாக வெளியிடப்பட்டுள்ளன.

மழைவேண்டல் :

தமிழ்நாட்டில் மழை பொய்த்துப் பெருவறட்சி ஏற்பட்ட காலத்தில் நாட்டு நலங்கருதியும், திருமுறைகளின் பெருமையை உணர்த்தும் வகையிலும் திருமுறை ஓதுவார்களைக் கொண்டு 1966 இல் கழகம் 'மழைவேண்டல்' என்னும் நூலை வெளியிட்டு வழிபாடு ஒன்றை நடத்தியது. அவ் வழிபாடு முடிந்தவுடன் மழை பொழிந்தது என்பது குறிப்பிடத் தக்கது. 1975இல் 'மழையே வா' என்னும் நூலுங் கழக வெளியீடாக வெளிவந்துள்ளது.

அருட்பாடல் நிகழ்ச்சி :

அருட்கவி சேதுராமன் அவர்கள் திருக்கோயில்களில் இறைவர் திருமுன் சந்தப்பாடல்கள் இயற்றும் பேறு வாய்ந்தவர்கள். கழக ஆட்சியாளரின் முயற்சியால் அருட்பாடல் நிகழ்ச்சிகள் பல திருக்கோயில்களில் நடத்தப்பட்டன. அது பற்றிய செய்திகள் செல்வியில் இடம்பெற் றுள்ளன.

இரங்கற் கூட்டங்கள் :

தமிழ்ப் பேரறிஞர்களும் சிவநெறிச் செல்வர்களுமான பா. வே. மாணிக்க நாயக்கர், ஞானியாரடிகள், மறைமலையடிகள், கா. சுப்பிரமணிய பிள்ளை, திருவரங்கனார், பண்டித வேங்கடசாமி நாட்டார், நாவலர் சோமசுந்தரபாரதியார் முதலிய பெருமக்கள் காலமானபோதெல்லாம் இரங்கற் கூட்டங்கள் நடத்திக் கழகம் தன் இரங்கலைத் தெரிவித்துக் கொண்டதுடன் அவர்தம் புகழ் வளரவும் பணியாற்றியுள்ளது.

நடுகல் :

கழகத்தைத் தோற்றுவித்த பெருமகனாராகிய திருவரங்கனார் அவர்கட்கும், தாகூர் சட்ட விரிவுரையாளர் கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கட்கும் கழகத்தின் முயற்சியால் திருநெல்வேலியில் நடுகற்கள் நாட்டப்பட்டுள்ளன.

இரங்கல் நூல்கள் :

அண்ணல் காந்தியடிகள் மறைவு குறித்து 'உரிமையின் பரிசு' என்றும், பண்டித சவகர்லால் நேருவின் மறைவு குறித்து 'உலகப் பேரொளி' என்றும், அறிஞர் அண்ணாத்துரையின் மறைவு குறித்துத் 'தமிழ்ப் பேரொளி' என்றும் மூன்று நூல்களைப் படங்களுடன் அழகுறக் கழகம் வெளியிட்டுள்ளது. இவை அரிய வரலாற்றுச் சிறப்புடையனவாம்.

படத்தொகுப்பு :

தமிழ்ப் பெரும் புலவர்களின் திருவுருவப் படங்கள் தொகுப்பது இன்றியமையாததாகும். வரலாற்றுச் சிறப்புடைய

அவை எதிர்காலப் பிறங்கடையினருக்கு உணர்வூட்டும் திறத்தன. ஆகவே புலவர் பெருமக்களின் படங்கள் அனைத்தையும் அரிதின் முயன்று கழகம் தொகுத்துள்ளது; தொகுத்து வருகின்றது.

**காட்சிகள் :**

தமிழின் சிறப்பையும் சிவநெறியின் மாண்பையும் உணர்த்தும் வண்ணம் நூற்காட்சி, படக்காட்சிகளைக் கழகம் பெரிதும் முயன்று நடத்தியுள்ளது. சென்னை, நெல்லை, அண்ணாமலை நகர், தில்லி முதலிய பல இடங்களில் இக் காட்சிகள் நடைபெற்றபோது அவை அறிஞர் பெருமக்களின் பாராட்டைப் பெற்றுள்ளன.

**பேழைகள் :**

சங்க இலக்கியப் பேழை, சமய இலக்கியப் பேழை, பிற்கால இலக்கண இலக்கியப் பேழை, பள்ளி மாணவர் பல்வகை நூற் பேழை ஆகிய நான்கு நூற்பேழைகளைக் கழகம் அரிதின் முயன்று உருவாக்கியுள்ளது. கழகத்தின் புதிய நற்பணிக்கு இவை எடுத்துக்காட்டாக விளங்குகின்றன.

**பாராட்டு விழாக்கள் :**

திரு. மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் வெளிநாடு சென்று திரும்பிய காலையும், நெ. து. சுந்தர வடிவேலு அவர்கள் தாமரைச் செல்வர் (பத்மஸ்ரீ) பட்டம் பெற்ற காலையும் கழகம் பாராட்டு விழாக்கள் நடத்தியது. திரு. ஜனார்த்தன நாயுடு அவர்கட்கும், அறிவியல் தொழில்மேதை ஜி. டி நாயுடு அவர் கட்கும் கழகத்தின் சார்பில் பாராட்டுகள் செய்யப்பட்டன.

கழகத்தின் 1008 ஆவது நூல் வெளியீட்டு விழாவில் கழக நூலாசிரியர்கள் எழுவரும், பொன் விழாவில் எழுவரும், ஆட்சியாளர் பவளவிழாவில் இருவரும் பாராட்டப் பெற்றனர். மறைமலையடிகள் நூற்றாண்டு விழாவில் அடிகள் நெறியில் நின்று தொண்டு செய்வோர் நால்வருக்குப் பாராட்டுச் செய்யப்பட்டது.

**நூற்கொடை :**

எட்டையபுரம் பாரதிமண்டபம், பர். உ. வே. சா. நூல் நிலையம் ஆகியவற்றுக்குக் கழகம் நூல்கள் பலவற்றை நன் கொடையாக வழங்கியுள்ளது. மாண்புமிகு காமராசர், பத்தவச்சலம், நெடுஞ்செழியன் ஆகிய அமைச்சர்கட்கும் சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்கட்குஞ் சிறப்பு நாட்களில் கழக நூல்கள் அன்பளிப்பாக வழங்கப்பட்டன.

**அறப்பணி நிலையங்கள் :**

நெல்லையில் சிவஞானமுனிவர் நூல்நிலையம், தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம், தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திரு

வள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, குமரகுருபரர் குழந்தைப் பள்ளி ஆகியன கழகத்தினுல் நடைபெற்று வருகின்றன.

சென்னையில் மறைமலையடிகள் நூல்நிலையமும், பல்லாவரத்தில் மறைமலையடிகள் மாளிகையில் கலை மன்றமும், ஆங்கு ஒரு நூல்நிலையமும் கழகத்தினுல் நடத்தப்பட்டு வருகின்றன. சென்னை மறைமலையடிகள் நூல்நிலையம் ஆராய்ச்சியாளர்கட்கு அரிய கருத்துச் சுரங்கமாக விளங்குகின்றது.

கிளை நிலையங்கள் :

கழக வெளியீடுகளும் பிற நூல்களும் ஆங்காங்கு உள்ள அன்பர்கட்கு எளிதிற் கிடைக்கும் பொருட்டுக் கழகம் நெல்லை, மதுரை, கோவை, திருச்சி, குடந்தை ஆகிய ஐந்து பேரூர்களில் விற்பனைக் கிளை நிலையங்களை அமைத்துள்ளது. மதுரைத் திருக்கோயிலிலும் நெல்லைப் பேருந்து நிலையத்திலும் விற்பனைக் கூடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. சென்னை வள்ளுவர் கோட்டத்தில் கழக விற்பனைக் கூடம் அமைத்துத் திருக்குறள் தொடர்பான நூல்கள்மட்டும் விற்பனை செய்யப்படுகின்றன.

அப்பர் அச்சகம் :

கழக நூல்களைச் சிறப்பாக அச்சிடும் பொருட்டுச் சென்னையில் நிறுவப்பட்டுள்ள அப்பர் அச்சகமும், இராயபுரத்தில் 'திருவரங்கனுர் அச்சகமும்' சிறப்பாகப் பணியாற்றி வருகின்றன.

பரிசும் பட்டமும் :

கழக நூல்கள் பல பரிசும், பாராட்டும் பெற்றுள்ளன; கழக நூலாசிரியர்கள் பலர் நடுவணரசாலும், தமிழ்நாட்டரசாலும் பாராட்டப் பெற்றதோடு பரிசுகளும் வழங்கப் பெற்றுள்ளனர். கழக நூற்கட்டடங்கள் அரசினராலும், அனைத்திந்திய அச்சகப் பேரவையினராலும் பாராட்டப் பெற்றுப் பரிசுகள் வழங்கப்பட்டுள்ளன. கழக ஆட்சியாளர் அவர்களுக்குத் ''தாமரைச் செல்வர்'' என்னும் சிறப்புப்பட்டம் வழங்கி இந்தியப் பேரரசு சிறப்பித்துள்ளது.

பெருந்தகையாளர் திருவரங்கனுர் தொடங்கிய தமிழ்ப் பணியும் சிவத்தொண்டும் அவர்கள் அருமுயற்சியாலும், தாமரைச் செல்வரின் பெருமுயற்சியாலும் தனிப்பெரும் நிறுவனமாக வளர்ந்து தழைத்து விளங்குகின்றது. உயர்திரு. வ. சு. அவர்கள் ஆற்றியுள்ள அரும் பணிகள் அளவற்றன. அப்பெருமகனுர் அவர்கள் எண்பதாண்டு நிறைந்து முத்துவிழா நாயகராக விளங்குகின்றுர்கள். அவர்கள் செந்தமிழுக்கும் சிவநெறிக்கும் மேலும் மேலும் தொடர்ந்து பணியாற்றிக் கொண்டு உடல்நல மன நலங்களுடன் அம்மையம்பலவாணர் திருவருளால் நீடினிது வாழ்க!

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௫உ, பரல் க, பக்கம் உ௦ இன் தொடர்ச்சி)

உடம்புகள் அசுத்த தத்துவங்களால் உருவாதலால், கலை முதல் மண் இறுதியான கருவிகள் கூறப்பட்டன. நிலையா ஆம் என்பதில் வரும் 'ஆம்' என்பதை, மண் அந்தம் ஆம் என்றும் கூட்டுக. 'அவை மாயை' என்னும் தொடரில் அவை என்னும் பன்மையால் மாயை என்பது மாயைக் கருவிகளை உணர்த்தும்; மாயை ஆகுபெயர். தீபமே போல உடம்பு விளங்குதலால் அதைத் தனியாகப் பிரித்துரைத்தலே உரைச் சிறப்புக்கு நல்லது; 'மாயா தனு விளக்கு' என்று மேல் வருவதும் நினைத் தற்குரியது. 'முன் உணர்ந்து' என்றதனால், 'நாடில்' என்ப தற்குப் 'பின்பு நாடில்' எனப்பட்டது. அது தீபமே போலத் தனுவாம் என்க. முதலில் வரும் 'தான்' என்பது, உயிரைக் குறித்து எழுவாயாய் வந்தது; அதனின் என்பது அத்தின் என மருவியது. 'இத்தை மெய்யெனக் கருதி' என வரும் திரு வாசகமும் நினைவு கூர்க. 'வேருதந்தான்' என்பதில், 'தான்' என்பது அழுத்தங் குறித்து வந்த சாரியை; வேறேயாகும் என்பது கருத்து.

கலை முதலான கருவிகள் நிலையா என்னும் கருத்தும், தீபம் தனுவுக்கு வேறுதல்போல உயிர் உடம்புக்கு வேறுனது என்னும் கருத்தும், அறிவு உணர்வுகளின் நிலையை ஆராய்ந்து கொண்டு அதன்பின் அறிவு உணர்வுகள் இல்லாத கருவிக் கூட்டங்களை எண்ணிப்பார்த்தால், உயிர் அவற்றிற்கு வேறுனமை தெரியும் என்னும் கருத்தும், இச் செய்யுளாற் புலப்பட்டன. இவை ஏதுவிற் கூறப்படாமல், இச் செய்யுளில் மட்டும் வந்த விளக்கங்கள்.

இயற்கையில் மூலப் பொருள்களாக மூன்று பொருள்கள் உள்ளன என்று சிவஞான போதம் உறுதி செய்கிறது. அவற்றை உண்டு என்று நிறுவும் முறையில் முதல் மூன்று நூற் பாக்கள் வருகின்றன. மூன்று பொருள்கள், கடவுள் மலம் உயிர் என்பன.

சில ஆண்டுகளுக்கு முன் மதுரையில் ஒரு விரிவுரையின் போது அன்பர் ஒருவர் ஒரு கேள்வி கேட்டார். கேட்க

வேண்டிய கேள்விதான்; 'கடவுள் உயிர் மலம் (பதி, பசு, பாசம்) என்று முப்பொருள்களையும் முறைப்படுத்துக் கூறும் வழக்கம் உலகத்தில் இருக்கிறது; சிவஞானபோதத்தில் அம்முறைக்கு வேருகக் 'கடவுள் மலம் உயிர்' என்று முதல் மூன்று நூற்பாக்கள் கூறுகின்றனவே. ஏன்?' என்ருர். கடவுளையும் உயிரையும் வேறுபடுத்து அறியச் செய்வதில் முதன்மையானது மலமாதலால், அஃது இரண்டுக்கும் இடையில் வைக்கப்பட்டது என்று விடை சொன்னதாக நினைவு.

இயற்கையில் இருப்பது பொருள் ஒன்றே எனவும், அது கடவுள் எனவும் சொல்லுகிறவர்கள் (மாயாவாதிகள் முதலியோர்) உண்டு. உலகத்தில் அறியாமை காணப்படுதலால் அந்த அறியாமை ஒரு பொருளாகவும், அது மூடிய உயிர் ஒரு பொருளாகவும், அப்படி மூட இயலாத கடவுள் ஒரு பொருளாகவும் ஆக முப் பொருள்கள் இங்கு எண்ணப்பட்டன. பிறந்த பிறப்பில் இவை மூன்றும் தெரிகின்றன; ஆதலால், அதற்கு முன்னும் பின்னும் இவை உள்ளன என்றே நிறுவவேண்டியிருக்கிறது. அதனுலேயே 'உள்ளது மலர்தல்' என்னும் 'சத்காரிய வாதம்' சைவ சித்தாந்தத்தில் அமைவதாயிற்று.

முப்பொருள்கள் உண்டு என்று கூறுவதனுல் சிலர்க்கு ஒரு கேள்வி கேட்கத் தோன்றுகிறது. 'உயிர்களெல்லாம் வீடு அடைந்தபின், கடவுளுக்குப் படைப்பு முதலிய ஐந்தொழில் இல்லாமற் போகுமே' என்று அவர்களுச்குச் சிந்தை பிறந்து விடுகிறது. 'கடவுள் ஒன்றுதான் உள்ளது' என்று சொல்லுகிறவர்களையும் இப்படிக் கேட்கலாம்; 'உலகத்தில் உயிர்களாகத் தோன்றுவன எல்லாம் கடவுளாகவே ஆனபின் இயற்கையில் என்ன நிகழும்?' என்று யாருங் கேட்கலாம். இருவகைக் கொள்கைகளுக்கும் இது பொதுக் கேள்வியாகவே இருக்கிறது. இக் கேள்விகளுக்கும், பொருளுண்மை நிறுவுவதற்கும் இரு கொள்கைக்காரர்களும் விடை காண வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது.

பிறவியில் நாம் காணும் உண்மைகளைக் கொண்டும், அருளாளர் கருத்துக்களைக் கொண்டும், மறைநூல் உரைகளைக் கொண்டும், ஒத்த நிலையில் முடிவுகள் துணிய வேண்டியிருக்கின்றன. அவ்வகையில், 'உயிர்களெல்லாம் வீடுபேறடைந்த பின் இறைவனுக்கு என்ன வேலை' என்பதைப் பற்றி; 'வீடு பேறுற்றுத் தன் திருவடியடைந்த உயிர்களுக்கு இன்பம் உணர்வித்துக்கொண் டிருத்தலே இறைவன் செயல்' என்று சொல்ல நேரும்; 'இன்பம் கொடுத்தல் இறை' என்பது பெரியோர் வாய்

மொழி (உண்மை விளக்கம், 50). இன்றுள்ள நிலையில் முப்பொருள் உண்மைகளைத் துணிவது, பொருளுண்மை தெளிவதற்கு மட்டுமன்றி, இறந்தகால நடைமுறைக்கும் எதிர்கால நடைமுறைக்கும் ஏற்றதாயிருக்கிறது. கடவுள் என்று ஒரே பொருளாய்த் துணிந்தால், நடைமுறை நிலை முன்னுக்குப்பின் முரண்படுகிறது; அறிவு ஒப்புக்கொள்ளாது; ஒருமைக்கு இணக்கம் உண்டாகாது.

இனிப், பொருள்கள் உண்டு என்று துணிவதற்கு அவற்றின் இலக்கணங்களும் அறிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. இலக்கணம் என்பது பொருள்களின் இயல்புகள். இயல்புகளை அறியாமல் உண்டு என்று துணிவது எப்படி? உண்மைகளை அறியப் பொருள்களின் இயல்புகளும் துணை செய்ய வேண்டும். அதனால் கடவுள் மலம் உயிர் என்னும் மூன்று பொருள்களுக்கும், அவை உண்டு என்பதற்குக் காரணங்களை முதல் மூன்று நூற்பாவிற் கூறுவதோடு, அவற்றின் இலக்கணங்களும் அடுத்த மூன்று நூற்பாக்களிற் கூறப்படுகின்றன.

இவ்வாறு கூறும் நிலையில், மூன்றாவது நூற்பாவில் உயிரின் உண்மை கூறப்பட்டமையால் அதன் இலக்கணமே நான்காம் நூற்பாவிலும் தொடர்ந்து கூறப்படுகிறது. ஐந்தாம் நூற்பாவில் மலத்தின் இலக்கணமும் ஆறும் நூற்பாவில் கடவுளின் இலக்கணங்களும் கூறப்படும். ஆக ஆறு நூற்பாக்களும் முறையே கடவுள், மலம், உயிர் எனவும்; உயிர் மலம் கடவுள் எனவும் நின்று உரிய விளக்கங்களைத் தந்துகொண்டு இருக்கின்றன. முதன் மூன்று நூற்பாக்களின் காரண விளக்கமும் அடுத்த மூன்று நூற்பாக்களின் இலக்கண விளக்கமும் இதனால் எதிர் நிரல்நிறை ஆகின்றன. மூன்றும் நூற்பாவின் உயிருண்மையை அடுத்து நான்காம் நூற்பாவின் உயிரிலக்கணமே வருதலால், அவ்விரண்டு நூற்பாக்களிலும் உயிரைப் பற்றிய தெளிவே வருகின்றது என்க. அதனால் நான்காம் நூற்பாவின் கருத்தும் உயிர் பற்றியதே என்னும் பொருட்டு, 'இதுவும் அது' என்று நூற்பாக் கருத்து உரைக்கப்பட்டது.

மூன்றும் நூற்பாவில், கருத்துரைக்கும்போது ஆன்மாவின் உண்மையை உரைப்பதாகக் கூறாமல், ஆன்மாவின் ஒளியை உரைப்பதாக ஆசிரியர் கூறிக் கொண்டார். இவ்வாறு கூறிக் கொண்டது நான்காம் நூற்பாவின் தொடர்பும் கருதியதாகும். அந்த 'ஒளி' என்னும் அறிவு, இந்த நான்காம் நூற்பாவில் ஐந்தவத்தை கொள்ளுவதாக விரித்தோதப்படுகிறது. ஆன்மாவின் இலக்கணத்தை ஒரே சொல்லாகச் சொன்னால், 'ஐந்தவத்தைப் படுவது' என்று சொல்லிவிடலாம்.

அவத்தை என்பது நிலை; ஐந்து நிலைகளில் ஆன்மா சென்று திரும்புகிறது. விழிப்பு நிலை, கனவு நிலை, உறக்க நிலை, பேருறக்க நிலை (துரியம்), உயிர்ப்படக்க நிலை (துரியாதீதம்) என்று ஐந்து நிலைகளும் கூறப்படும். அவை ஐந்தும், நான்கு புற அகக் கருவிகளாலும், உயிர் மூச்சாலும், 'புருடன்' என்னும் உள்அகக் கருவியினாலும் அமைகின்றன.

இப்படி ஐந்து நிலைகளிற் சென்று திரும்புவதனால் ஆன் மாவின் அறிவு வரவர விளக்கமடைகிறது. அதற்காகத்தான் இந்த ஐந்து நிலைகள் நிகழ்கின்றன. ஆணவ இருளால் தொன்று தொட்டே ஆன்மாவின் அறிவு எதனையும் அறிய முடியாமலும் உணர முடியாமலும் இருக்கிறது. இதனால் ஆன்மாக்கள் துன் பம் உறுகின்றன; மெய் வாய் முதலிய புறக் கருவிகளோடு உரசி ஓரளவு அறிவு விளக்கமும் மனம் முதலிய அகக் கருவி களோடும் பிறவற்றோடும் இயைந்து கனவு முதலிய நிலைகளை ஏற்று ஓரளவு உணர்வு விளக்கமும், ஆன்மா எய்துகிறது. இந்த அறிவு உணர்வு விளக்கத்துக்காக அகக் கருவிகளோடு உயிர்கள் சந்திக்கின்றன. உயிர் அரசனைப் போன்றது. ஆட்சி நடத்துவதற்குக் கருத்துக் கூற அமைச்சர்கள் தேவையாயிருந் தால், மனம் முதலிய அகக் கருவிகள் அமைச்சர்களைப் போல அறிவு வாழ்க்கையில் உதவுகின்றன.

மூன்றும் நூற்பாவின் ஏழாம் பிரிவில், கலை என்னும் கருவி முதலாக மண் என்னும் கருவி ஈருகத் தூவா மாயைக் கருவி களை (அசுத்த மாயைக் கருவிகளை), உயிர்கள் பொருந்துவது பற்றி வந்தது. அவை அத்தனையும் முப்பத்தொரு கருவிகளா கின்றன. தூய மாயையின் கருவிகள், (சுத்த மாயைக் கருவிகள்) ஐந்தாதலின் அவையும் சேர்ந்து மொத்தம் முப்பத்தாறு கருவிகள் ஆகும்.

தூவா மாயையின் முப்பத்தொரு கருவிகளில், அந்த மாயை ஒன்று; அவற்றை ஏற்கும் உயிர் ஒன்று. கருவிகளாகப் பிரிவனவற்றில் முதல் ஐந்து என்பவை, கலை காலம் இச்சை (அராகம்) அறிவு (வித்தை) ஒழுங்குச்செய்கை (நியதி) என்பன. கலை, உயிர்களின் அறிவைச் சிறிது விளக்கமுறச் செய்யும்; காலம், காலந்தோறும் அதனை வளர்த்து வரும்; உயிர்களின் இச்சை அறிவு ஒழுங்குச் செய்கை (இச்சை, ஞானம், கிரியை) என்பவற்றை ஏனைக் கருவிகள் விளக்கிக் கொடுக்கும்; ஆக ஐந்து கருவிகளையும் ஆன்மா 'புருடனாய்ச்' சட்டைகள் போல அணிந்து, இருள்நீங்கிச் சற்றே அறிவு விளக்கங்கொள்ளும். இத் தூவாக் கருவிகள் ஐந்தும் இதனால் ஒரு பொதுவான

அறிவு விளக்கத்தை உயிர்க்கு ஊட்டுகின்றன என்று அறியலாம். 'இவ்வகையிற் பெறப்படும் உயிர் விளக்கம், சிறப்பு விளக்கமாகாது.' (முனிவர் சிற்றுரை, 4ஆம் நூற்பாவின் விளக்கம்.)

தூவா மாயையின் கருவிகளில் மற்ற இருபத்து நான்கில், அகக் கருவிகள் நான்கு என்றும், இருபது புறக் கருவிகள் என்றும் பொதுவாகக் கூறப்படும். புறக் கருவிகளில் ஆன்மாவின் அறிவு சேர்ந்து உலகத்தை அறிவு நிலையில் அறிகின்றது. இதற்கு அகக் கருவிகள் துணை போகின்றன. அகக் கருவிகள் இப்படித் துணை போவதோடு உள் மடங்கியும் உணர்வு நிலைக்கு உதவி செய்யும். அப்படிச் செய்யும் போது அவத்தைகள் உயிர்க்கு நிகழ்கின்றன. அவை ஒரு வகையான பொது உணர்வு நிலையைத் தரும். அந்த அவத்தைகள் புருவ நடுவிலேயும் உச்சிக்கு மேலும் உயர்வகையாய் நிகழுமானால் உயிர் சிறப்பான - மிகச் சிறப்பான உணர்வு நிலையை எய்தும். அந்நிலைகளில், கலை காலம் முதலிய கருவிகள் உயிரைத் தூய மாயையிலும் அதைக் கடந்த அருள் நிலையிலும் செலுத்த உதவி புரியும். அந்நிலையில் உயிரின் இச்சை அறிவு செயல்கள், அன்பும் மெய்யுணர்வும் தொண்டுகளுமாய் நிகழ்ந்து, உயிர்க்கு அருள்நிலை கூட்டும். புறக்கருவிகளால் அடைகின்ற பொருள் நுகர்வுகளிலிருந்து அந்த அருள் நுகர்வுக்குச் செலுத்தும் கலைக் கருவிகளாக ஏணிப் படிகள்போல இவை உதவும்.

அவ்வகையில், கலை காலம் முதலிய தூவா மாயைப் பிரிவுகள், உயிரின் சிறப்புணர்வுகளுக்கு இடஞ்செய்யுமாயினும், உயிர் உலகை நோக்கும்போது பொதுவான விளக்கமே தருகின்றது. அவை, மற்ற இருபத்துநான்கு கருவிகளோடு சேர்ந்து அறிவு விளக்கத்தையும், உள் மடங்கி உணர்வு விளக்கத்தையும் கொடுத்து வரும். அந் நிலையில், அருட்கலையுணர்வாய், அருளில் ஏறத் துணை புரியும்.

பொது நிலையில் கலைகள் ஓரளவு அழுக்கும் உடையன; அருட்கலையின் ஒரு பக்கம் இது. மறு பக்கம் தூய அருட்கலையாகும். அவற்றைத் தூய மாயைக் கருவிகளாகிய ஐந்தும் தரும்.

இவ்வாற்ருல் மனம் முதலிய அகக் கருவிகளோடு உயிர் கூடி முதலில் இருள் நிலையில் ஐந்தவத்தைகளை எய்துவதோடு, புருவ நடுவிற்கு வந்து ஒளி நிலையில் ஐந்தவத்தைகளையும் எய்துகின்ற சிறப்புணர்வையும் பெறும் இங்ஙனம் ஐந்தவத்தைப் படுதல் உயிரின் இலக்கணம் எனப்படுகின்றது.

இனி, நான்காம் சூத்திரத்தின் பொருள் அமைப்பை நோக்குவோம். நூற்பா பின்வருமாறு :

“அந்தக் கரண மவற்றினொன் றன்று அவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணராது,
அமைச்சுஅரசு ஏய்ப்பநின்று அஞ்சவத் தைத்தே.”

பொருள் :

அந்தக் கரணமவற்றின் - மனம் முதலான அகக் கருவிகளவற்றில்; ஆன்மா ஒன்றன்று - ஆன்மா ஒன்று அன்று; (ஆன்மா தனிப் பொருள்).

சகச மலத்து உணராது அவை சந்தித்தது - இயற்கை மலமாகிய ஆணவ இருளால் உணராமையின், அந்த அகக் கருவிகளோடு திருவருளாற் கூடியது. (இதனால் அறிவு வளர்ச்சி உண்டாயிற்று.)

அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்சவத்தைத்து - அமைச்சர்களையும் அரசனையும் போல இருந்துகொண்டு ஆன்மா, ஐந்து அவத்தைகளை உடையதாய் இருக்கிறது.

இங்ஙனம் மூன்று பிரிவுகளை உடையது இந்த நான்காம் நூற்பா. மூன்றும் நூற்பாவில், ‘உடம்பின் அகக் கருவிகளாகிய மனம் முதலியன ஆன்மா அன்று’ என வரவேண்டிய கருத்து, இந் நூற்பாவிற் சொல்லுவதற்குப் பிரித்து எடுத்துக் கொள்ளப் பட்டது. காரணம், ஆன்மாவின் இலக்கணமாகிய ஐந்தவத் தைப்படுதலைக் கூறும்போது, அவத்தைகளைச் செய்வதற்கு உதவும் அகக் கருவிகளைப் பற்றி வருதலால் என்பது; மூன்றும் நூற்பாவும் நான்காம் நூற்பாவும் இங்ஙனம் உயிரைப் பற்றியே வருவதனால், இந்த இயைபுக்கு வாய்ப்பாயிற்று.

மூன்றும் நூற்பாவில், நான்காம் பிரிவு, ‘ஒடுக்கம் அறிதலின்’ என்று வந்தது. ‘நுட்ப உடல் ஆன்மா அன்று’ என்று அங்கே கருத்துத் தெரிவிக்கப்பட்டது. ‘அந்த நுட்ப உடலைச் செய்யும் மனம் முதலிய அகக் கருவிகளும் ஆன்மா அன்று’ என்று அங்கே அடுத்த பிரிவாகவோ முன் பிரிவாகவோ தெரிவித்திருக்க வேண்டும். அஃது, அகக் கருவிகளின் இயைபு காரணமாக இங்கே தெரிவிக்கப்பட்டுள்ளது. நுட்ப உடம்பில் தன்மாத்திரைகளும் சேர்ந்திருப்பதனால் வேறு பிரிவு தேவையாயிற்று. அகக் கருவிகள் என்பவை தன்மாத்திரைகள் அல்ல; அகக் கருவிகளே ஆன்மா என்பவர்கள், அந்தக் கரண ஆன்ம வாதிகள்!

பெரும்பாலும் உட்கருவிகளை ஆராய்வோர் மனம் ஒன்றை மட்டும் அறிகின்றனர். உட்கருவிகள் எல்லாவற்றையும் 'மனம்' என்று கூடச் சொல்லி விடுகின்றனர். சிலர் 'அந்தக்கரணங்கள்' நான்கு என்று அறிகின்றனர். மற்றும் சிலர் புறக் கருவிகள் இருபது அகக் கருவிகள் நான்கு ஆக இருபத்து நான்கு என்பதற்கு மேலும் இருபத்தைந்தாம் 'தத்துவம்' ஒன்றை மட்டும் சேர்த்துத் 'தத்துவங்கள்' அவ்வளவே என்று எண்ணுகின்றனர். இக் காலத்தில் மனவியல் நூலார் 'உள்ளம்' என்று அகக் கருவிகளையெல்லாம் சொல்லிவிடுகின்றனர். நுண்ணுணர்வுடையோர் முப்பத்தாறு கருவிகள் வரையில் எண்ணிப் பார்த்திருக்கின்றனர். ஒவ்வொன்றும் ஒரு முதன்மையான செயலைத் தனித்தனியே கொண்டிருப்பதனால் இத்தனைக் கருவிகள் எண்ணவேண்டியதாயிற்று. "நிச்சயித்தல் தொழில் பிறிதொன்றாற் பெறப்படாமையின்...புத்தி தத்துவம் ஒன்றுண்டெனத் துணியப்படும்" என்பது பேருரை. (உ: உ)

அகக் கருவிகளைச் சிலர், மனம் புத்தி அகங்காரம் என மூன்றாகவே கொள்வர். காரணம், "மனத்தின் விருத்தியாகிய சித்தம் ஒன்று உண்டென்பது பெற்றாம்; அஃது ஏனைத் தத்துவங்கள் போலப் பரிணாமம் அன்மையின் மனத்தின் வேறாக வைக்கப்பாற்றன்று" என்பார் முனிவர். சிலர் சித்தம் என்பதும் சேர்த்து நான்காக உணர்வர். அந்தச் சித்தம் என்பது மனத்தின் பிரிவு என்றும் அது சிந்திப்பது ஒன்றுக்கே உரியது என்றும் முனிவர் கூறுவார் (உ : உ.). சிலர் குண தத்துவத்தையும், குண தத்துவத்தை மூலப்பகுதியில் அடக்கிச் சிலர் மூலப் பகுதியையும், இருபத்து நான்காம் தத்துவமாகக் கூறுவதுண்டு. "எல்லாம் பொருளான் வேறுபாடு இன்மையின், தம்முள் முரணாமை அறிக" என்பது சிவஞான முனிவர் சொல்!

இந்த அந்தக்கரணங்கள் ஒரு முறையாகச் சொல்லப் படுவதுமில்லை. மனம் புத்தி அகங்காரம் சித்தம் எனவும், மனம் சித்தம் அகங்காரம் புத்தி எனவும், அகங்காரம் சித்தம் மனம் புத்தி எனவும், சித்தம் அகங்காரம் புத்தி மனம் எனவும், சித்தம் மனம் அகங்காரம் புத்தி எனவும் மாறி மாறிச் சொல்லப் படுகின்றன. இந்த முறைகளைப்பற்றியும் சிவஞானமுனிவர் ஆய்ந்திருக்கிறார். மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்பதே அவர் காணும் முறை. "ஈண்டோதிய முறையே" முறை என்பது அவர் வாக்கு. அதற்கொரு துகளறுபோதச் செய்யுளும்,

"மன்னு மகார மனஞ்செலுத்தும், புத்தியினை
உன்னும் உகாரம் உபகரிக்கும்—முன்னாகும்

ஆங்கா ரந்தன்னை அகாரஞ் செலுத்தியிடும்
நீங்காத சித்தம்விந்து நேர்''

என்று எடுத்துக் காட்டுவார். அதோடு, 'அவ்வுடன் உவ்வும் மவ்வும் மனம் புத்தி அகங்காரங்கள்' எனச் சிவஞான சித்தியில் வருகின்ற ஒரு செய்யுளின் அடியையும் எடுத்துக் காட்டி அஃது 'எதிர் நிரல் நிறைப் பொருள்' எனவும், தோற்று முறை முதலி ன எப்படியாயினும் வழக்கில் மனம் புத்தி அகங்காரங்கள் என்றே முறை வருதலையும் நினைவூட்டுவார். இந் நான்காம் நூற்பாவின் முதற்பிரிவில் ஆசிரியர் மெய்கண்டார் மேற்கோள் இன்னது என்று அருளிச் செய்த இடத்தில், 'அந்தக் கரணங் களாய் உள்ள மனோ புத்தி அகங்காரச் சித்தங்களில்' என்றே இம்முறைமையைத் தேற்றுவார். சித்தியாரிலும் "கருவியாம் மனமும் புத்தி அகங்காரம் சித்தம் நான்கும்'' என்று வரும் (௪ : உ).

உள்ளம் என்பது 'புருட' தத்துவத்தை உணர்த்தும். (இந் நூற்பாவின் இரண்டாவது எடுத்துக்காட்டுச் செய்யுளை நோக்குக.) உயிர் அதனோடு பொருந்தியிருக்கும். "புருட தத்துவம் என நின்ற உயிர்'' என்பது முனிவர் வாக்கு. ஆகவே உள்ளம் வேறு, அகக் கருவிகளாகிய மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்பன வேறு, என்று துணிதல் வேண்டும். நெருக்கம் பற்றிச் சிலர் எல்லாவற்றையும் 'உள்ளம்' என்றே கொண்டு விடுவர்.

குணதத்துவம் ஏனை அகக் கருவிகளிலும் விரவி நிற்கும் என்று சிவஞான முனிவரும் கருதுவார். ஆதலால் குண தத்துவத்தின் பிரிவுகளாகிய அமைதி, ஆதிக்கம், மயக்கம் (சாத்விகம், இராஜசம், தாமசம்) என்பன கூடியதாய்த் தன் னில் மிகுந்த குணநலம் எதுவோ அதனுடன் சித்தம் சிந்திக்கும் என்று தெரிகிறது.

'புருட தத்துவம்' என்பது, தனக்கு மேலுள்ள கலை காலம் முதலிய ஐந்து கருவிகளைச் சட்டைகளாகக் கொண்டிருப்ப தனால் உயிர் வேறு அதன் சட்டைகள் வேறு என்று எண்ணாமல், சட்டைகள் இட்டுக் கொண்டிருக்கிற உயிர் எனக் கொண்டு, புருட தத்துவத்தை மட்டும் 'வித்தைத் தத்துவம்' எனக் கருது வதுமுண்டு; சாங்கியர் இருபத்தைந்தாவது 'தத்துவங்' கொள்வர்.

மாயை என்பதன் பிரிவுகளே இக் கருவிகளாதலால், கருவிகளாய் இருக்குபோது மாயை தனியாக நினைவுக்கு வருவதில்லை. ஆனால், இக் கருவிகளெல்லாம் நிலைமாறி ஒடுங்

கும்போது, மாயை என ஒரு தனிப் பொருளே நிற்குமாதலால், அப்போதாவது அப்படி ஒரு பொருள் உண்டு என்பது துணியப் படும்; ஆதலால் அதுவும் வித்தைக் கருவிகளில் ஒன்ருக எண்ணுதற்குரியதாயிற்று. இவ்வாற்ருல் கலை காலம் முதலிய சட்டைகள் ஐந்து, அவற்றைப் பூண்டு கொண்டிருக்கிற 'புருட தத்துவம்' என்னும் ஆன்மா ஒன்று. இவற்றின் மூலமாகிய மாயை ஒன்று எனக் கணக்கிடப்பட்டு 'ஏழு தத்துவங்கள் வித்தைத் தத்துவங்கள்' எனப்பட்டன. இவற்றின் கீழுள்ள இருபத்து நான்கு 'தத்துவங்களும்' ஒடுங்கும்போது அங்ஙனம் ஒடுங்கும் மாயையைப் 'பிரகிருதி மாயை' அல்லது மூலப் பகுதி (உலக மாயை) என்பதுண்டு. இந்த மூலப் பகுதி என்னும் மாயையும் முற்கூறிய தூவா மாயையில் அடங்குவதே. ஆக இருபத்து நான்கும் ஏழுமாகிய கருவிகளெல்லாம் தூவா மாயையே (அசுத்த மாயையே) என்க.

இத் தூவா மாயையின் முப்பத்தொரு கருவிகளுக்கு மேல் 'ஐந்து தத்துவங்கள்' வேறே சொல்லப்படுகின்றன. அந்தத் 'தத்துவங்களுக்குக்' காரணமான மாயைப் பகுதியை, அம்மை யப்பராகிய ஆண்டவனே நேரிற் பதிந்து இயக்குவதனுல், 'தூய மாயை' என்று பெயர் பெற்றது.

இனி இம் முப்பத்தாறு கருவிகளும் தனித்தனிச் செய்கைக் குரியதாயிருப்பதையும் இங்கே நாம் திட்டமாய் அறிதல் வேண்டும்.

முதல் இருபத்து நான்கு கருவிகள் மண், நீர், தீ, காற்று, விண், என்னும் ஐம்பெரும் பொருள்கள்; ஐந்தும் அவற்றின் மூலமாகிய சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் தன்மாத் திரைகள் ஐந்தும், இவற்றைப் புலன்களாக வாங்குகின்ற மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் அறிகருவிகள் ஐந்தும், வாய் பாதம் கை எருவாய் கருவாய் என்னும் செயற் கருவிகள் ஐந்தும், மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் அகக் கருவிகள் நான்கும் ஆகும். இவை 'ஆன்ம தத்துவங்கள்' என்றும் சொல்லப்படும். உயிர் வாழ்வது இவற்ருல் வெளிப் படையாகத் தெரிவதனுல் இப் பெயர் பெற்றது.

இனி, இடைப்பட்ட 'வித்தைத் தத்துவங்கள்', இவற் றிற்கு மேல் உள்ளன. அவற்றுள், 'புருடன்' என்பது, கீழுள்ள இருபத்து நான்கையும் ஆளும் ஆன்மாவாய்ச் 'சீவான்மா' எனப் படும். கலை காலம் என்னும் இரண்டு, இச்சை அறிவு செயல் களுக்கு உரிய விருப்பக் கருவி ஞானக்கருவி ஒழுங்குக் கருவி என

மூன்று (அராகம், வித்தை, நியதி); இவற்றின் மூலமாகிய மாயை (அசுத்த மாயை) என்பது ஒன்று. ஆக ஏழு.

இந்த வித்தைத் தத்துவங்களாகிய ஏழுக்கும் மேல் உள்ளவை, தூய ஞானம், தூய தலைமை, தூய இயைபு, தூய ஒளி, தூய ஒலி (சுத்த வித்தை, மாகேசுரம், சாதாக்கியம், விந்து, நாதம்) என்பன.

இந்த முப்பத்தாறு தத்துவங்களையும் சேர்க்கையாகக் கொண்டு ஓரளவு அறிவு விளங்கி, அதற்கும் மேல் மெய்யுணர்வு என்னும் அருளை நாடுவது 'உயிர்' எனப்படும்.

இவ்வுயிர்க்கு அருள் செய்யும் ஆண்டவன், இவ் வுயிர்க்கு அப்பாற்பட்டு, அம்மையப்பர் அல்லது 'கடவுள்' எனப்படுவான்.

முப்பத்தாறு கருவிகளைத் 'தத்துவங்கள் என்றும் சொல்வதுண்டு. இவை முற்றும் அறிவில்லாதவை. ஆனால், உயிரறிவை ஓரளவு விளக்குவதற்கு விளக்குப் போல் பயன்படுகின்றன. தொன்மையே ஆணவம் என்னும் அறியாமை இருளில் உயிர் அழுந்திக் கிடத்தலால், அது துன்ப உணர்வு உடையதாய் இருக்கிறது. 'தத்துவங்களாற்' சிறிது அறிவு விளங்கி, உயிர்கள், இருவினைகள் செய்து, சிறிது சிறிது பிறவி நிலைகளில் இன்பமும் காண்கின்றன. பேரின்பமுடையவன் இறைவனாய் இருப்பதனால், உயிர், இத் தத்துவங்களி லெல்லாம் படிந்து கடந்து பிறவி நீங்கி அம்மையப்பரை அடைகிறது.

'தத்துவங்'களாகிய கருவிகள் ஒவ்வொன்றும் முதன்மையாக ஒவ்வொரு செயல் உடையனவே; புறம் வந்தாலும் உள் மடங்கினாலும், அஃதாவது உலகத்தை நோக்கினாலும் திரும்பி இறைவனை நோக்கினாலும், தத்துவக் கருவிகள் ஒவ்வொரு செயலை தமக்கு உரிமையாய் உடையன. புறம் வருவதும் உள் மடங்குவதும் ஆன்மாவுக்குச் செய்கை. அவற்றை அறிந்து செய்யும் வழிமுறைகள், ஆன்மா அறிவுடையதாய் இருப்பதனால் அதற்குத்தான் புரியும். 'தத்துவக்' கருவிகள் அனைத்தும் அறியாப் பொருளாதலால் 'உயிரின் போக்குப்படி' அவை புறத்தில் அல்லது அகத்தில் செய்கை செய்யும். எப்படிச் செய்தாலும் தமக்குரிய ஒரு செயலையே அவை செய்யும்.

மண் கெட்டிப்படுத்தும்; நீர் குழைவித்துப் பதம் செய்யும்; தீ பொசுக்கி மூலத்துடன் ஒன்றுவிக்கும். காற்றுச் சலித்துத் திரட்டும். வானம் பரந்து இடங்கொடுக்கும்.

ஐம்பூதங்களின் மூலங்களாகிய தன்மாத்திரைகளில் சுவை சுவை தரும்; ஒளி உருவங் காட்டும். ஊறு உற்றுப் பொருந்தும்; ஓசை செவிப்புலனாகும். நாற்றம் மணத்தைக் கூட்டும்.

இவற்றைப் புலன்களாக வாங்குங் கருவிகளில், உடம்பு ஊறலை அறியும்; வாய் சுவையை அறியும்; (வாய் என்றது இங்கே நாக்கு) கண் பார்க்கும்; மூக்கு மணங்களை அறியும். காது கேட்கும்.

வாக்கு பேசும்; பாதம் நடக்கும்; கை உதவும் (பண்ணும்) எருவாய் கழிக்கும். கருவாய் விந்துவிடும்.

இந்த இருபதோடு அகக் கருவிகளாகிய மனம் முதலிய நான்கும் சேர்ந்து, மொத்தம் இருபத்து நான்கு கருவிகள் எனப்படும்.

மனம், பொறிகளோடு சேர்ந்து, தன்மாத்திரைகளாகிய புலன்களை வாங்கி மண் முதலிய ஐம்பெரும் பூதங்களைப் பற்றும். புத்தி, பற்றிய புலனை இன்னதென்று தெளியும். அகங்காரம் தெளிந்த கருத்தின்படி செயல் கொள்ள எழுச்சி எய்தும். சித்தம் சிந்தித்துத் தன்னிடம் மேலிட்ட குணமுறையில் உயிரின் முடிவுப்படி நுகர உதவும்.

இத்தகைய அகக் கருவிகளின் நிகழ்ச்சிகளை வேறு வகையாகக் கூறுவோரும் உண்டு; 'மனம் பற்றும்; பற்றியதைச் சித்தம் யாதெனச் சிந்திக்கும்; அகங்காரம் உண்மையை அறிய முனையும்; புத்தி துணியும்' என்று அவர்கள் கூறுவார்கள்; ஆனால், தொழில் முறையில், பற்றித் தெளிந்து முனைந்து செய் முறைகளைச் சிந்திக்கும் என்றே மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் முறையை ஒப்புக்கொண்டவர்களிற் பலர் கூறுகின்றனர். மெய்கண்டாரின் நேர் மாணவராகிய திருவதிகை மனவாசகங் கடந்தார்,

"அந்தக் கரணம் அடைவே உரைக்கக் கேள்
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம்—சிந்தை; இவை
பற்றிஅது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்து அங்கு
உற்றது சிந்திக்கும் உணர்"

என்று திட்டப்படுத்துவார்; இந்த உண்மை விளக்கச் செய்யுளில், 'அடைவே' என்று ஒரு சொல் வந்ததும் நினைவு கூர்தற்குரியது.

முக்குணங்கள் சித்தத்திலும் கலந்திருக்கும். முக்குணமும் அது தோன்றும் மூலப் பகுதியும் சித்தம் என்பதைச் சேர்ந்தவையாதலின், 'சித்தம்', 'முக்குணம்' 'மூலப் பகுதி' என்பவற்றை ஒரு பொருளாகக் கொண்டு, இருபத்து நான்காம் தத்துவமாகக் கூறுவதுண்டு. "சித்தமாம் அவ்வியத்தம்" (சித்தியார் ௨ : ௫அ)

'புருடன்' இக் கருவிகளையெல்லாம் பற்றிச் சித்தத்தின் உணர்ச்சியோடு கலைத்திறமாக அழுந்தி, நுகரும். இதற்குச், சிறிது புதிய நுண்ணுணர்வு உண்டாக வேண்டும். அதனைக் கலை செய்யும். காலம் அதனை உரிய காலத்தில் உண்டாக்கும். 'அராகம்' என்னும் விருப்பக் கருவி அவ் வழியில விரும்பும்; ஞானம் என்னும் 'வித்தைக் கருவி' அதனில் திறமையறிவு கொள்ளும். 'நியதி' என்னும் ஒழுங்குக் கருவி அதனை ஒழுங்குபடச் செய்யும். எல்லாம் முதலில் வினையின் வழியில் ஒழுங்கு முறையில் அறிவாய் நிகழும்; பின்பு அருள் வழியில் உணர்வாக நிகழும். தூவா மாயை என்னும் இவற்றின் முடிநிலை யொடுக்கக் கருவி, இவற்றைக்கொண்டு உயிரறிவுக்கு விளக்கம் செய்வதுடன் ஒரோஒருகால் மயக்கியும் நிற்கும்.

'சுத்த வித்தை' என்னும் தூய ஞானம், மெய்யுணர்வு கொள்ளும். 'ஈசுவரம்' என்னும் ஆதிக்கக் கருவி, அம் மெய்யுணர்வை நடத்தும். 'சாதாக்கியம்' என்னும் தூய இயைபுக் கருவி, அங்ஙனம் நடத்துதற்கு ஆணைகள் (மறை மொழிகள்) இடும். விந்து ஏற்ற ஒளிவடிவுகளையும் நாதம் ஒலிகளையும் உண்டாக்கும்.

இவ் வொலி ஒளிகள் கொண்டு, திருமறை திருமுறை முதலியன ஓதி அன்பு மேலிட்டு, அம்மையப்பர் அருட் செயலில் நன்றி நினைந்து உருகி, ஆன்மா அருள் ஞானம் எய்தும்; எய்தி இன்புறும்.

அம்மையப்பர் இவை அத்தனையும் இனிது நடைபெற இவற்றிலெல்லாம் இரண்டறக் கலந்து கருணையோடு செயலுற்று வருவர்; தூய மாயைக் கருவிகளிலும் உயிர்களிலும் உரிமையோடு இரண்டறக் கலந்திருப்பர்.

அறிவு பெருகப் பெருக, உயிர் உலகத்தை நோக்குவதை விடுத்து இறைவனை நோக்கிச் செல்லும். அப்போது கண் மெய்ப் பொருளை நோக்கும்; காது மெய்ப் பொருளைக் கேட்கும்; மனம் மெய்ப் பொருளைப் பற்றும்; 'சித்தம்' மெய்ப்பொருளைச் சிந்திக்கும்; 'புருடன்' மெய்ப் பொருளைத் உள்ளும். எல்லாம் இப்படியே மெய்ப்பொருளைத் தெளிய உயிர்க்குத் துணை செய்யும்.

உயிர் உள் மடங்கில், அதன் உணர்வு நுட்பமுடைய தாகும். உண்மையில் இறைவனருளால் உணர்வு (மெய் யுணர்வு) கூடுவதாளுல், அவ்வுயிர் முறையே எல்லாத் தத்துவங் களிலும் படிந்தும் அவற்றைக் கடந்தும் தன்நிலை உணர்ந்தும் தலைவனை உணர்ந்தும், அருளோடு கூடி இறைவனைச் சேர்ந்து பேரின்பமடையும்.

அந் நிலையில், அறியாமைக்குத் காரணமான ஆணவ இருளுங்கூட உயிர்க்குத் துணையாயிருந்து உதவும். உயிர் இறைவனைச் சேரும்போது எல்லாம் முன்னையினும் ஒத்துழைக் கின்றன.

இங்ஙனம் வருகின்ற இத் தத்துவங்களின் ஒவ்வோர் செய்தியும் பற்றி, எம் ஆசிரியரடிகள் எழுதி வந்து இடையில் விடுபட்டுப் போன 'சிவஞானபோத ஆராய்ச்சி' என்னும் தெளிந்த நூலில் அன்பர்கள் விளக்கமாகக் கண்டுகொள்ள லாம்.

உயிர்களின் அறிவு விளக்கமடையும்போது கலை காலம் முதலிய அக உட்கருவிகளால், முதலிற் பொதுவகையாக விளக்கம் இருக்கும்; 'ஆன்ம தத்துவக்' கருவிகளில் மனம் முதலிய புற உட்கருவிகளால், சிறப்பு வகையாக அறிவு பெருகி வரும். உள் மடங்குவதெல்லாம் உணர்வுநிலை யாதலால், அந் நிலையில் விளக்கங்கள் 'ஆன்ம தத்துவக்' கருவிகளால் பொது வாகவும், கலை காலம் முதலிய 'வித்தைத் தத்துவக்' கருவி களால் சிறப்பு வகையாகவும் மாறி நிகழும்.

மனம் முதலிய புற அகக் கருவிகளால் நிகழும் ஐந்தவத் தைகள் பொதுவகையில் 'கீழ் அவத்தைகள்' எனப்படும். பொதுமக்களின் வாழ்க்கையில் இவை நிகழும். இவ் வுணர்வு சிறப்பு நிலையாக நிகழும்போது, அடியார் வாழ்க்கையில், விழிப்பு நிலையிலேயே ஏனைக் கனவு முதலிய நிலைகள் நிகழும்.

இயற்கையில், இருள் மலத்தால் ஆன்மா மறைப்புண்ட போது அதன் அறிவு விளங்காமல் இருந்ததளுல், ஆண்டவன் கருணையால், மனம் முதலிய அகக் கருவிகளை ஆன்மா சந்தித் தது. ஓர் அரசர்க்கு அமைச்சர்கள் கருத்துக்களின் விளக்கத் துக்காக உதவுதல் போல, இந்த அகக் கருவிகளும் உயிர் களுக்கு உதவும். ஆகையால், 'அமைச்சு அரசு ஏய்ப்ப' என் பதை இரண்டாம் பிரிவிற்கும் கூட்டி, அத்தகைய முறையில் ஆன்மா அகக் கருவிகளைச் சந்தித்தது என்க. ஆணவ அறியாமையால் அறிவு விளங்கவில்லை; விளங்கும் பொருட்டு அகக் கருவிகளைச் சந்தித்ததளுல், "உணராது சந்தித்த

தென்பது காரண காரியப் பொருட்டாய் நின்றது'' என்று உரையில் வந்தது. நூற்பாவில் அவை என்பது 'அந்தக் கரணங்கள்.'

முதல் பிரிவு:

இதற்கு மேற்கோள், "ஆன்மாவாவது, அந்தக் கரணங்க ளாயுள்ள மனே புத்தி அகங்காரச் சித்தங்களில் ஒன்றன்று'' என்பது.

உயிரின் சேர்க்கையால் மனம் முதலியன அறிவுடையன போலத் தோற்றுதலால், அகக் கருவிகளையே உயிரென்று 'அந்தக் கரண ஆன்ம வாதிகள்' எண்ணினர்.

மனம் வரையில் பலர் ஒப்புக் கொள்ளுதலாலும், மேலுள்ள கருவிகளில் அவர்களுக்குச் சிந்தனையில்லை. தூவா மாயையினு லான 'வித்தைக்' (கலைக்) கருவிகள், மிக உள்ளே உள்ள அந்தக் கரணங்களாக இருப்பதனுல், அவர்களுக்கு அவை எளிதில் எட்டுவதில்லை. மனம் புத்தி முதலான அகக் கருவிகளைப் 'புற அந்தக் கரணங்கள்' என்று அதனுற் சொல்லுவதுண்டு. இந்தப் புற அந்தக் கரணங்களைத்தாம், 'ஒருகால் ஆன்மாவோ' என்று அந்தக்கரண ஆன்மவாதிகள் எண்ணினர்.

கலை காலம் முதலிய உள் அந்தக்கரணங்கள் புருடனுக்குச் சட்டைகளைப்போல் ஒன்றி இருக்கின்றன. அவற்ருேடு கூடிய 'புருடன்' என்னும் 'தத்துவம்', 'உயிர்ப் படக்கம்' என்னும், 'துரியாதீதத்'திலும் உடனிருக்கும். சட்டைகள் அணிந்த 'புருட'னைப் 'புருடன்' என்று மட்டும் உலகம் எண்ணும்; சட்டை களைப் பிரித்து வேருக யாரும் எண்ணமாட்டார்கள். அப்படி 'வித்தைக்' கவிருகள் உயிர்ப்படக்க 'அவத்தை'யிலும் ஒன்று கூடிப் பொருந்தி உள்ளன. ஏனைய அவத்தைகளிலும் உடன் உண்டு. தூமாயைக் கருவிகளும் உண்டு; தகுதிக்கேற்ப அவை யெல்லாம் மேன்மேற் கிளர்ந்து வரும்.

மனம் புத்தி அகங்காரம் சித்தங்களாகிய 'அந்தக்கரணங்' களுக்கு ஆன்மா வேருனது என்பதை ஒரு காரணத்தால் அறியலாம்; ஆசிரியர் அதற்குக் கூறும் ஏது, "அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலின்'' என்பது.

உயிரறிவு மனம் முதலியவற்ருேடு சேர்வதனுல் அவை அறிவுடையன போல நமக்குத் தோற்றுகின்றன. உண்மையில் அவையெல்லாம் அறிவில்லாதவை. பொறிகள் முதலிய கீழ்

உள்ளவற்றை மனம் முதலியன பயன்படுத்துகிறபோது, அவை அறிவுடையன போல் தோற்றுகின்றன ; 'அவைதாம் பிரகாச மாய் நின்றே' என்பதன் கருத்து இது! ஏதுவில் ஆசிரியர் 'அப்பிரகாசம்' என்றது, தம்மை நோக்க அவை, அறியாப் பொருள் (அப்பிரகாசப் பொருள்) என்னும் பொருட்டு.

'அந்தக்கரண' நிலை, அமைச்சர் நிலை போன்றது என்றமையால், ஏனைப் பொறிகளின் நிலைகள் அரசனுக்கு மற்ற ஏவலாட்களின் நிலைகள் போன்றனவாகும். அரசன் என்பது உயிர்.

ஆன்மா அறிவுப் பொருள். 'பிரகாசப்' பொருள். அதனாலே தான் மூன்றும் நூற்பாவின் கருத்தை 'ஆன்மப் பிரகாசம்' உணர்த்துதல் என்றார். அந்தக்கரணங்களுக்கு உயிர் வேறானது என்பதற்கு உயிர் அறிவுடைய பொருள் என்பதே முதன்மை யான ஏது என்று இவற்றாலெல்லாம் தெரிகின்றது.

செய்யுள் :

"மனமாதி யாலுணர்தல் மன்னு புலன்கள் ;
மனமாதி மன்புலனின், அல்லன் ;—மனமேல்
உதித்தொன்றை உள்ளம் உணர்தல், அதனின்,
உதிக்குங் கடற்றிரையை ஒத்து."

இதன் பொருள் :

மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள் - மனம் முதலிய அகக் கருவிகளால் உணரப்படுதல் புறத்தில் நிலை பெற்ற ஐம்புலன்கள் ; மனம் மேல் - மனத்துக்கு மேலாகிய புத்தி என்னும் கருவியால் ; உள்ளம் உணர்தல் - ஆன்மா உணர்வது ; உதித்த ஒன்றை - தோன்றிய அறிவு ஒன்றையே; அதனின் கடல் திரையை ஒத்து உதிக்கும் - அப்படி உணர்வது அதனால் கடல் அலையைப் போன்று ஆன்மாவிடம் வரும்; மனம் ஆதி மன் புலனின் - மனம் முதலானவை தம்மிற் பதியும் புலன்களுக்கு வேறுதல் போல ; அல்லன் - ஆன்மாவும் அம் மனம் முதலிய கருவிகளுக்கு வேறாகி அவ்வகக் கருவிகள் அல்லனா கின்றான்.

பொறிகளுக்கு 'வாயில்' என்றும பெயர் ; பொறிகள் மூலம் மனம் புலன்களைக் காண்டலால், அக் காட்சி, 'வாயிற் காட்சி' எனப்படும்.

அக் காட்சி மனம் முதலிய அகக் கருவிகளிற் பதியும்போது 'மானதக் காட்சி' யாகும். அது 'புருட'ஞகிய உயிரினிடத்தில் தோன்றும்போது 'தன்வேதனைக் காட்சி' எனப்படும். அறிவு நிலை இங்ஙனம் 'வாயிற் காட்சி'யிலிருந்து 'தன்வேதனைக் காட்சி' வரையில் அலை அலையாக வந்து சேரும்.

விளக்கைப் போல் அறியாப் பொருள்களைக் கருவியாகக் கொண்டு உயிர் அறிந்து வருகிறது. உயிர் இயல்பாகவே எப் போதும் அறிவுடையது. உயிரின் சேர்க்கையால் அறிவு பெறு பவை, 'அந்தக் கரணங்கள்;' ஆதலால், ஆன்மா அந்தக் கரணங்களுக்கு வேருய் இருக்கிறது.

செய்யுளில், மனம் மேல் உதித்த ஒன்றை என வந்தது, மனத்துக்கு மேற்பட்ட புத்தி முதலிய அகக் கருவிகளில் உதித்த ஒன்றை என்றபடி; 'மன் புலன்' என்ற இடத்தில், 'மன்னும் புலன்' என்றே பொருள் கொள்ளலாம். 'பதியும் புலன்' என்பது கருத்து. புலனின் என்பதில் 'இன்' ஐந்தனுருபு, ஒப்புப் பொருள்; உதித்த ஒன்றை என்பது உதித்தொன்றை என வந்தது. ஈற்றடியில் 'ஒத்து' என வந்ததனுல், 'அதனின்' என்பதற்கு, அதைப்போல எனப் பொருள் கொள்ளாமல், அதனுல் எனக் காரணப் பொருளில் உரை கொள்ளப்பட்டது.

கருத்து: மனம் முதலியவற்ருல் புலன்கள் அறியப் படுகின்றன; மனத்துக்கு மேற்பட்ட 'புத்தி முதலியவற்றில் அப் புலனறிவுகள் அறியப்பட்டபின் அதனை ஆன்மா அறி கிறது. புலன்களிலிருந்து இங்ஙனம் அறிவு, கடல் அலையைப் போல் ஆன்மாவிடம் வந்து சேரும். அப்படி விளக்குங் கருவி களாய் மனம் முதலியன உள்ளன. ஆயினும் அவை அறியாப் பொருள்களே; புலன்களுக்கு மனம் முதலானவை வேருதல் போல மனம் முதலியவற்றிற்கும் அறிவு காரணத்தால் உயிர் வேருனதாகும் என்பது.

உயிர் அறிவு உடையது; அகக் கருவிகள் அறிவில்லா தவை; பொறிகளை நோக்க மனம் முதலியன அறிவுடையன போலத் தோன்றுவது, உயிரின் அறிவு அவற்ருேடு சேர்ந் திருப்பதனுலன்றி வேறில்லை. ஆதலால் அறிவுப் பொருளாகிய உயிர், அறியாப் பொருளாகிய 'அந்தக்கரணங்களுக்கு' வேறென்றே துணியப்படும்.

(தொடரும்)

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

உ உய்

இதழ் குவித்தொலிக்கும் ஊகாரம் அல்லது உகரம் ஆகிய முன்மைச் சுட்டு, முன்னிடத்தையும் முன்னுள்ள பொருள்களையுங் குறிப்பது மட்டுமன்றி, முன்செல்லும் அல்லது முற்செலுத்தும் வினைகளைக் குறிக்குஞ் சொற்களையுந் தோற்றுவித்துள்ளது.

உகைத்தல் = முற்செலுத்துதல், செலுத்துதல்.

உத்துதல் = முன் தள்ளுதல், தள்ளுதல், கழித்தல்.

உதைத்தல் = காலால் முன்னோக்கித் தள்ளுதல், காலால் தள்ளுதல் அல்லது ஓங்கி மிதித்தல்.

உந்துதல் = முன் தள்ளுதல்.

உசுக்காட்டல் / உச்சுக்காட்டல் } = நாயை முன்னோக்கி ஒன்றன்மேல் ஏவுதல்.

உளுற்றுதல் = தூண்டுதல், உள்ளத்தைத் தூண்டியுழைத்தல்.

உள்ளுதல் = உள்ளத்தை முற்செலுத்துதல், ஊக்கங் கொள்ளுதல்.

ஊங்கு = ஊக்கு.

ஊங்குதல் = முன்னோக்கித் தள்ளும் ஊஞ்சலில் ஆடுதல். "பூங்க ணுய மூக்க ஊங்காள்" (நற். 90).

ஒ. நோ: உந்து—உந்தல்—உஞ்சல்—ஊஞ்சல்—ஊசல்.

ஊக்குதல் = ஊஞ்சலை முன்னோக்கித் தள்ளுதல் அல்லது ஆட்டுதல், உள்ளத்தை முற்செலுத்துதல், ஊக்கங் கொள்ளுதல், பிறருக்கு ஊக்கமூட்டுதல், தூண்டுதல்.

ஒ. நோ: *L. urgere*, press, drive. *E. urge*, drive forcibly, impel, cause to proceed with effort. *Gk*. orgao, *Goth*. vrika, *Lith*. verzin, *Skt*. ūrj —ūrjā = power, strength, vigour.

இலத்தீன் சொல்லும் சமற்கிருதச் சொல்லும் உகர ஊகார முதலனவாயிருத்தலை நோக்குக.

ஊதுதல்=வாயிலிருந்து காற்றை முன்னோக்கிச் செலுத்துதல்.

இக் கட்டுரையில் எடுத்துக் கொண்ட சொல் உய்.

உய்தல்=1. முன்செல்லுதல், செல்லுதல். 2. சென்று துன்பத்தினின்று அல்லது கேட்டினின்று தப்புதல். "இறந் தமைந்த சார்புடைய ராயினு முய்யார்" (குறள். 700). 3. நீங்குதல். "தாவலுய்யுமோ" (பதிற்றுப். 41 : 17). 4. தப்பிப் பிழைத்தல், வாழ்தல். "உண்ணு வறுங்கடும் புய்தல் வேண்டி" (புறநா. 181). 5. ஈடேறுதல், வீடு பெறுதல். "தினைத்தனைப் பொழுது மறந் துய்வேனோ" (தேவா. 5 : 1).

உய்த்தல்=1. செலுத்துதல். "நன்றின்பா லுய்ப்ப தறிவு" (குறள். 422). 2. ²படைக்கலம் விடுத்தல். "அம்புய்க்கும் போர்" (கம்பரா. மாரீச. 186). 3. நடத்துதல். "உய்த்திடு மிச்சை செய்தி" (சி. சி. 1 : 62, நிரம்ப). 4. அனுப்புதல். "பட்டிமை யோலை யுய்ப்பான்" (திருவிளை. மெய்க்கா. 13). 5. கொண்டு போதல். "வேட்டுவ ருய்த்தன ரோவென" (சீவக. 425). 6. நுகர்தல். "காதல காத லறியாமை யுய்க்கிற்பின்" (குறள். 440). 7. ஆட்சி செலுத்துதல். "ஞாலமுழுது முய்த்திடு மகவு" (பாரத. சம்பவ. 10). 8. அறிவித்தல். "அவ்வழி யரசர்க் குய்த்தார்க்கு" (சீவக. 1407). 9. கொடுத்தல். "மீளி யாளர்க்கு மிகவுய்த் தன்று" (பு. வெ. 3 : 9, கொளு). 10. துன்ப நீக்குதல். "பல்விளக் கிருளின் றுன்னற வுய்க்கும்" (திருக்கோ. 175). 11. உய்யச் செய்தல். "உய்த்த வியோம ரூபர்" (சதாசிவ. 29).

உய்யக் கொண்டான், உய்யவந்த தேவநாயனார் என்னும் பெயர்களில், உய்தல் மீட்புறுதலைக் குறிக்கும்.

உய்யப்பிணக்கம்=வாழ்க்கைப் போராட்டம் (struggle for existence).

உய்த்துணர்தல்=மனத்தைச் செலுத்தி ஆராய்ந் தறிதல்.

உய்த்தலில் பொருண்மை—எளிதாய்ப் பொருள் விளங்குந் தன்மை.

உய்தி=1. தப்புகை, நீங்குகை. (புறநா. 34, உரை). 2. கழுவாய் (பரிகாரம்). "செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென" (புறநா. 34). 3. ஈடேற்றம், வீடுபேறு. "சார்பறுத் துய்தியும்" (மணி. 25 : 5).

உய்வு=1. உயிர் தப்புகை. "எரியாற் சுடப்படினு முய் வுண்டாம்" (குறள். 896). 2. கழுவாய். "உய்வில்லை செய்ந் நன்றி கொன்ற மகற்கு" (குறள். 110). 3. ஈடேற்றம். "உய்வுபாய மற்றின்மை தேறி" (திவ். திருவாய், 4 : 3 : 11).

உய்—உயவு=உயிர் பிழைக்கச் செய்யும் வழி. "உய்யா வருநோய்க் குயவாகும்" (கலித். 139).

உயவுநெய்=வண்டிச் சக்கரத்திற்கு இடும் மசகு. "அஃதா லுயவுநெய் யுட்குளிக்குமாறு" (பழ. 385).

மக்களின் கருத்துக்களை ஒலிவடிவான சொற்கள் தெரிவிக் கின்றன: மாந்தன் அறிவு வளர வளர, கருத்துக்கள் ஒன்றி லிருந் தொன்ருகக் கிளைக்கின்றன. மூலக் கருத்தைக் குறிக்குஞ் சொல்லினின்று கிளைக் கருத்தைக் குறிக்குஞ் சொல்லை வேறு படுத்திக் காட்ட, பற்பல வகையிற் பல்வேறு முறைகள் கையாளப்பட்டுள. அவற்றுள் ஒன்று எழுத்துத் திரிபு. சொல்லின் முதலிடை கடையென்னும் மூவிடத்திலுமுள்ள உயிர் மெய் என்னும் இருவகை யெழுத்தும், பல்வேறெழுத்தாகத் திரியும். உயிரெழுத்துக்களுள் ஒன்ருன உகரம் ஏனை நாற்குறிலாகவுந் திரியும்.

எ-டு: உ—அ. உகை—அகை, குடும்பு—கடும்பு.
உ—இ. உவர்தல்-இவர்தல், புரண்டை-பிரண்டை.
உ—எ. உரி—எரி, குழு—கெழு.
உ—ஒ. உல்லி—ஒல்லி, துளை—தொளை.

இங்ஙனமே, உய் என்னுஞ் சொல்லும் திரியும்.

உய்—ஒய். ஒய்தல்=(செ. கு. வி.) 1. விட்டொதுங்குதல். "ஒய்யெனத் தெழித்தாங்கு" (சிலப். 15 : 48, உரை). 2. தப்பு தல். "ஓடியொளித் தொய்யப் போவானில்லை காண்மின்" (பரிபா. 20 : 39).

(செ. குன்ரு வி.) 1. செலுத்துதல். "ஒய்யும் நீர்வழிக் கரும் பினும்" (பதிற்றுப். 87 : 4). 2. கொண்டு போதல், "உப்பொ யொழுகை யெண்ணும்" (புறநா. 116). 3. கொண்டுபோய்க் கொடுத்தல். "வளராப் பார்ப்பிற் கல்கிரை யொய்யும்" (நற். 356). 4. போக்குதல்; நீக்குதல். "ஒய்யா வினைப்பயனுண்ணுங் காலை" (சிலப். 14 : 33). 5. இழுத்தல். "கன்றுகா லொய்யுங் கடுஞ்சுழி நீத்தம்" (அகநா. 68).

ஒய்—ஒய்யல்=1. செலுத்துகை. (பிங்). 2. கொடுக்கை.

உய்—உயிர்=தானாக இயங்காத உடம்பை இயக்கும் அல்லது செலுத்தும் ஆவி (திவா.). 2. ஆதன் (ஆன்மா). "தன்னுயிர் தானறப் பெற்றானை" (குறள். 268) 3. உயிர்மெய், உயிரி (பிராணி). "எல்லா வுயிருந் தொழும்" (குறள். 260). 4. பிறப்போரை (சன்மலக்கினம்) "உயிர்க்கிரு பாலினும்" (விதான. சாதக. 19). 5. தனித்தியங்கும் உயிர்போன்ற தனித் தொலிக்கும் உயிரெழுத்து. "உயிருமுடம்புமா முப்பது முதலே" (நன். 59). 6. உயிர்வளி (பிராணவாயு). "வைகரியில்......... உயிரணைந்து வந்தமொழி" (சிவப்பிர. 2 : 20). 7. காற்று. (பிங்.). 8. ஓசை. "வள்ளுயிர்த் தெள்விளி" (குறிஞ்சிப். 100). 9. ஒருகால அளவு. ஒரு நாழிகையில் 4320 இல் ஒரு கூறு. (கணக்கதி. பக். 13).

ம. உயிர், க. உசிர், தெ., து. உசுரு.

உயிர்த்தல்=செ. கு. வி. 1. உயிர் பெற்றெழுதல். 2. தொழிற்படுதல். "அவ்வுடலினின் றுயிர்ப்ப வைம்பொறிகள்" (சி. போ. 3 : 4). 3. மூச்செறிதல். "உரைதடு மாறுவுயிர்த்து" (பாரத. பதினெட். 173). 4. கமழ்தல். "உயிர்த்த தாமத்தன" (கம்பரா. நிகும். 114). 5. இறுதி மூச்சு விடுதல், இறத்தல். "உயிர்ப்பது மோம்பி" (சீவக. 1989).—செ. குன்றா வி.

1. ஈனுதல். "குழந்தையை யுயிர்த்த மலடிக் குவமை கொண்டாள்" (கம்பரா. உருக்காட். 65). 2. மோத்தல். "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்" (குறள். 1101). 3. கூறுதல், பேசுதல். "விட்டுயிர்த் தழுங்கினும்" (தொல். கள. 20). 4. பெருக்குதல். "அம்மூவாறு முயிரொடு முயிர்ப்ப" (நேமிநா. 3, உரை). 5. வெளிப்படுத்துதல். "கொங் குயிர்த்த பூந்தடத் துலாய்" (நைடத. நாட்டு. 3).

உயிர்ப்பு=1. உயிர்த்தெழுகை. 2. சோர்வு நீங்கிப் புது வலிமையடைகை. 3. மூச்சு. "ஊனினுயிர்ப்பை யொடுக்கி" (தேவா. 1173 : 3). 4. தெய்வப் படிமையிலுள்ள தெய்வ ஆற்றலை வருவிக்கை. 5. காற்று. "ஒள்ளென வீழ்வுறு முயிர்ப் பின் காவலன்" (கந்தபு. திருவவ. 13). 6. நறுமணம். "உயிர்க் குமல் லுயிர்ப்பெதிரோடி" (பாரத குருகுல. 91). 7. இளைப் பாறுகை. "நின்னுயவு நோய்க் குயிர்ப்பாகி" (கலித். 35).

உய்—வ. அய்—அய=செல்கை.

அய—அயந=செல்கை, நடக்கை, சாலை, பாதை (இருக்கு வேதம்)

உத்தர+அயந=உத்தராயண=கதிரவன் வடசெலவு.

தக்ஷிண + அயந = தக்ஷிணாயந = கதிரவன் தென்செலவு.

உய்—இய்— இயல். இயலுதல் = 1. நடத்தல். "அரிவை யொடு மென்மெல வியலி" (ஐங்குறு. 175). 2. உலாவுதல். 'பீலி மஞ்ஞையி னியலி" (பெரும்பாண். 31). 3. இயங்குதல், அசைதல். 4. அணுகுதல். "திருந்தடி நூபுரமார்ப்ப வியலி" (கலித். 83 : 16). 5. ஒத்தல். "பொன்னியலுந் திருமேனி" (திருவாச. 49 : 6). 6. உடன்படுதல். "யாதுநீ கருதிற்றன்ன தியன்றனன்" (ஞானவா. வைராக். 42). 7. பொருந்துதல். "வெயிலியல் வெஞ்சுரம்" (W.). 8. தங்குதல். "மாவியல்கின்ற வீர மகேந்திர புரத்துக்கு" (கந்தபு. ஏமகூ. 4). 9. நேர்தல். "இயன்றதென் பொருட்டினு லிவ்விட ருனக்கு" (கம்பரா. குகப். 40). 10. செய்யப் படுதல். "சிறியவர்கட் கெற்று லியன்றதோ நா" (நாலடி. 353). 11. கூடியதாதல். "இயல்வது கரவேல்" (ஆத்திசூடி).

இயல் = 1. செலவு. "புள்ளியற் கலிமா" (தொல். பொ. 194). 2. ஒழுக்கம். (சூடா). 3. ஒப்பு. "மின்னியற்சடை மாதவர்" (திருவிளை. குண்டோ. 2). 4. தன்மை. "ஈண்டு செலன் மரபிற் றன்னியல் வழாஅது" (புறநா. 25 : 2). 5. இயற்கை. 6. இயற்றமிழ் (பிங்.). 7. நூல். "இயலோதேல்" (சைவச. பொது. 346). நூற்பகுதி அரசியல் (குறள்).

இயல்—இயல்வு = 1. இயற்கை. 2. ஒன்றைப் பெறுவதற் கேற்ற ஆம்புடை (உபாயம்). "ஏனமாய் நின்றார்க் கியல்வு" (திவ். இயற். 1 : 12).

இயல்—இயல்பு = 1. தன்மை. "இயல்பு காண்டோற்றி மாய்கை" (சி. சி. 1 : 3). 2. நற்குணம். "ஏதிலா ரென்பா ரியல்பில்லார்" (நான்மணி. 44). 3. ஒழுக்கம். "சால்பும் வியப்பு மியல்புங் குன்றின்" (குறிஞ்சிப். 15). 4. முறை. இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவன்" (குறள். 47). 5. வரலாறு. "உலகீன்றுடக்கன் மகளா யுதித்த வியல்பும்" (கூர்மபு. திருக் கலி. 1).

இயல்—இயற்கை = 1. தன்மை. "எண்ணாரா துயர் விளைக்கு மிவையென்ன வுலகியற்கை" (திவ். திருவாய். 4 : 9 : 1). 2. இலக்கணம். "பிரமசாரி யியற்கையைத் தெரித்த வாறும்" (கூர்மபு. அநுக்கி. 23). 3. நிலைமை. வறுமையான இயற்கை. (W). 4. கொள்கை. "பெரியவ ரியற்கை" (கம்பரா. அயோத். மந்திர. 63). 5. வழக்கம். "உலகத் தியற்கையறிந்து

செயல்'' (குறள். 637). 6. இயல்பான உலக முதல் கருப் பொருள்கள்.

இயல்—இயற்று (பி. வி.) இயற்றுதல்=1. நடத்துதல். ''நெஞ்சே யியற்றுவா யெம்மொடு'' (திவ். இயற். பெரிய திருவந். 1). 2. செய்தல். "இசையா தெனினு மியற்றியோ ராற்ருல்'' (நாலடி. 194). 3. படைத்தல். ''கெடுக வுலகியற்றி யான்'' (குறள். 1062). 4. நூல்செய்தல். திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள். 5. தேடுதல். ''ஒண்பொருள் காழ்ப்ப வியற்றி யார்க்கு'' (குறள். 760).

இயல்—ஏல். ஏலுதல்=1. நிகழ்தல். 2. பொருந்துதல். 3. செய்ய முடிதல். இது உன்னுற் செய்ய ஏலுமா? ஏன்றதைச் செய்.

இய்—இய—இயவு=1. செலவு. ''இடைநெறிக் கிடந்த வியவுக்கொண் மருங்கில்'' (சிலப். 11 : 168). 2. வழி. ''இயவிடை வருவோன்'' (மணி. 13 : 16).

இய—இயவுள் =1. வழி. (அகநா. 29 உரை). 2. நடத் துகை. 3. தலைமை. ''இயவுள் யானை'' (அகநா. 29). 4. எப் பொருட்கும் தலைவனுன இறைவன். ''பெரியோ ரேத்தும் பெரும் பொருளியவுள்'' (திருமுரு. 274). 5. தெய்வம். (பிங்.)

ம. இயவுள்.

இய—இயவை=வழி. (திவா.).

இயவு—இயகு—இயங்கு. இயங்குதல்=1. அசைதல். 2. செல்லுதல். (திவா.). 3. உலாவுதல். (பிங்). ம. இயங்ஙு.

இயங்கு=செல்லுகை. இயங்கிடை யறுத்தகங்குல். (சீவக. 1360).

இயங்கு—இயக்கு—இயக்கம்=1. அசைவு. 2. நடமாட்டம். ''நாணகத் தில்லா ரியக்கம்'' (குறள். 1020). 3. செல்கை. 4. வழி. ''எறிநீ ரடைகரை யியக்கந் தன்னில்'' (சிலப். 10 : 90.) 4. அசைவுக் குறிப்பு. ''கண்ணிணை யியக்கம்'' (மணி. 25 : 8.) 5. இசை நடப்பு. மெலிவு சமன் வலிவு என்னும் மூவகை யியக்கம். ''மூவகை யியக்கமு முறையுளிக் கழிப்பி'' (சிலப். 8 : 42). 6. குழலிசைத்தல். ''இன்புற வியக்கி'' (சிலப். 3 : 66). 7. சிறுநீர் மலக்கழிவு. ''ஈரியக்க நடைவழி.........விடுதல்'' (காஞ்சிப்பு. ஒழுக்க. 42). 8. ஒரு புதிய சீர்திருத்தப்போராட்டம் அல்லது பரப்புரை மறைமலையடிகளின் தனித் தமிழியக்கம்.

இய் — எய் — எய்து. எய்துதல் = (செ. குன்றா வி). 1. அணுகுதல். "நெடியோ யெய்த வந்தனம்" (புறநா. 10). 2. சென்றடைதல், சேர்தல். "தூநிறக் கங்கையான் சூழ வெய்தினான்" (பாரத. குருகுல. 34). 3. அடைதல், பெறுதல். "ஏமம் வைக லெய்தின்றா லுலகே" (குறுந். கடவுள் வாழ்த்து.).— (செ. கு. வி.) 1. நிகழ்தல். "எட்டி குமரனெய்திய துரைப் போன்" (மணி. 4 : 64). 2. வந்துசேர்தல். "மாசெனக் கெய்தவும்" (கம்பரா. சிறப். 6). 3. பொருந்துதல். "காலத்தோ டெய்த வுணர்ந்து செயல்" (குறள். 516). 4. போதியதாதல். "சுனைவாய்ச் சிறுநீரை யெய்தா தென்றெண்ணி" (ஐந். ஐம். 38).

ம. எய்து, தெ. எயிது.

எய்—ஏய். ஏய்தல்=(செ. கு. வி.) 1. பொருந்துதல். "ஏய்ந்த பேழ்வாய்" (திவ். பெரியதி. 1 : 7 : 3). 2. தகுதல். "தில்லையூரனுக்கின் றேயாப்பழி" (திருக்கோ. 374). 3. ஒத்தல். "சேலேய் கண்ணியரும்" (திவ். திருவாய். 5 : 1 : 8).—(செ. குன்றா வி.) எதிர்ப்படுதல். "புனத்து மறையினு லேயினு ரின்றி னிது" (ஐந். ஐம். 11).

ஏய்த்தல்=1. ஒத்தல். "அல்லிப் பாவை யாடுவனப் பேய்ப்ப" (புறநா. 33). 2. பொருந்தச் சொல்லுதல். "பொய் குறளை யேய்ப்பார்" (பழ. 77). 3. வஞ்சித்தல், ஏமாற்றுதல். (உ. வ.).

ஏய்—ஏ—யா—யாத்திரை=வழிச்செலவு. தகடூர் யாத்திரை.

யாத்திரை—வ. யாத்ரா.

ஏ—ஏகு. ஏகுதல்=செல்லுதல், போதல். "தாய்த்தாய்க் கொண்டேகு மளித்திவ் வுலகு" (நாலடி. 15). 2. நடத்தல். (பிங்.). 3. கழலுதல். "நல்வளையேக" (பு. வெ. 11, பெண்பாற். 12). ஒ. நோ : போ—போகு.

யா—ஜா. (இந்தி). ஜா—கா (gā). கயா (gaya)= போனான்.

கா (gā)—வ. கம் (gam), கமந (gamana) = செலவு.

*OE*, *OS*. gān, *OHG*. gān, gēn. *E*. go.

யகரம் ஜகரமாவது இந்தி ஆரிய மொழி யியல்பு.

எ—டு: இந்தி. புவன் (வ.)—ஜவான், யாத்ரா—ஜாத்ரா, யோகி—ஜோகி.

வ. யௌவன—*L.* juvenilis, *E.* juvenile.

வ. யுக (g.)—E. yoke, L. jugo, *conjugo*, to yoke together. *E.* conjugate.

இய்—வ. இ (i.), to go, walk; to flow; to blow; to advance, spread, get about; to go to or towards (with acc.), come, RV.; AV.; S Br.; M Bh.; R.; Hit; Ragh. &c.; to go away, escape, pass, retire, RV.; AV.; SBr, to arise from, come from, RV.; Ch Up.; to return (in this sense only fut). MBh.; R.; (with *punar)* to come back again, return, MBh.; R.; Pañcat. & c.; to succeed, Mn. iii, 127; to arrive at, reach, obtain, RV.; AV.; SBr.; Sak.; Hit. & c.; to fall into, come to,; to approch with prayers, gain by asking (cf. *ita*); to undertake anything (with acc.); to be employed in, go on with, continue in any condition or relation (with a part, or instr., e.g. *asura rakshasāni mridyanānāni yanti*, "the Asuras and Rakshasas are being continually crushed," SBr. i, 1, 4, 14.

(மானியர் உல்லியம்சு சமற்கிருத—ஆங்கில, அகர முதலி பக். 163).

ஏ—வ. ஏ (a) to go, come near or towards, go near, approach, RV.; AV.; SBr. etc.; to reach, attain, enter, come into (a state or position), Mn. xii, 125.

*ēta,* come near, approached, RV.

*iti,* arrival, approach, RV. x, 91 : 4 (ஷை. 227)

---

# சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எஸ்.]

(சிலம்பு-ருஉ: ௩சு ஆம் பக்கத் தொடர்ச்சி)

அர்த்த சாத்திரத்தில் மதுரை, அபராந்தா, காசி, வங்கம், வத்சம், மகிசம் ஆகிய இடங்களில் சிறந்த பருத்தி ஆடைகள் நெய்யப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. மதுரையில் துகில் ஆடை நெய்யப்பட்டதை அர்த்த சாத்திரம் குறிப்பிட்டுள்ளது. அர்த்த சாத்திர உரையில் துகில் (Dukula) என்பது நாரால் நெய்யப்பட்ட ஒருவகை ஆடை என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அர்த்த சாத்திரத்தில் துகில் நேர்த்தியான வெள்ளைத் துணி என்றும் வங்காளத்தில் நெய்யப்பட்டதென்றும் கூறப்பட்டுள்ளது. திவ்யதானு (Divyadana) என்ற பௌத்த நூலில் துகில் (Dukula) என்பது பருத்தி இழை என்றும் அந்த இழையுடன் மயிர் இழை கலந்து ஆடைகள் நெய்யப்படும் என்றும் கூறப்பட்டுள்ளது. துகில் என்ற ஆடையை Dugulle (அ) Dukula என்று பாலி, வடமொழிகளில் மாறி அழைப்பதையும் காணலாம். அபிதான சிந்தாமணி என்ற இடைக்காலத்து வடமொழி அகராதி துகில் என்ற ஆடை மரத்தின் நாரினுல் நெய்யப்பட்ட ஆடை என்று கூறியுள்ளது. வைஜயந்தி என்ற வடமொழி நிகண்டு துகில் என்பது பட்டால் நெய்யப்பட்ட ஆடை என்று குறிப்பிட்டுள்ளது. மோட்டி சந்திரா என்ற அறிஞர் இத்தகைய மயக்க உரைகளையும் விளக்கங்களையும் தெளிவுபடுத்த முயன்று துகில் என்ற ஆடை வங்காளத்தில் நெய்யப்பட்ட பருத்தி ஆடையாக (கவுட விஷய வீஷிஷ்டம் கர்ப்பாசிகம்) இருக்கலாம் என்று எழுதியுள்ளார். துகில் என்ற ஆடை மரத்தின் நாரிலிருந்து நெய்யப்பட்டதென்பது நம்பத்தகாதது. துகிலைப் பற்றி வடநாட்டில் தெளிவாகப் புரிந்து கொள்ளவில்லை என்பது தெளிவாகின்றது. துகில் என்ற பெயர் தமிழ்ச் சொல்லாக இருந்ததால் இத்தகைய மயக்கப் பொருள் கூறினர். 'சுள்ளவக்கா' (Cullavagga) என்ற பாலி நூல் வினயபிடகம் என்ற பௌத்த நூலின் உரை நூலாகும். இந்த நூலும், உரை நூலும் கி. பி. நாலாம் நூற்றுண்டைச் சார்ந்தவை என்று மேல் நாட்டு அறிஞர் கருதுவர். ஆதலின் 'சுள்ளவக்காவில்' கூறப்பட்ட தூசு என்ற ஆடை, உடை கி.மு. நாலாம் நூற்றுண்டிற்கு முன்னரே தமிழ்நாட்டிலிருந்து வடநாட்டிற்குச் சென்றிருக்க வேண்டும்.

ஆடைப் பெயர்களை எடுத்துக் கொண்டதோடு தமிழில் ஆடைகளுக்குக் கூறிய உவமைகளைக்கூட வடமொழி, பாலி மொழி நூல்கள் பயன்படுத்தியுள்ளன. மொகலாயர் காலத்தில் 'டாக்கா மஸ்லின்' என்ற நேர்த்தியான துகில் மாலைப்பனி, தென்றல் காற்று, ஓடும் நீர் என்று புகழப்பட்டது. சங்க நூல்களிலும் வெயிலின் ஆவி, பாலாவி, நீருவி ஆகியவற்றுடன் துகிலாடை ஒப்பிடப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். பாம்பு உரித்த தோலொடு துகிலை ஒப்பிட்டுக் கூறுவதையும் தமிழிலக்கியத்தில் காணலாம்.

> "வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
> துன்னற் சிதாஅர் துவர நீக்கி
> நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிர்
> தரவுரி யன்ன வறுவை நல்கி"
>
> —பொருநராற்றுப்படை. வரி 80-83.

> "பாப்புரி யன்ன மீக்கொ டாளை"
>
> —பெருங்கதை 1 : 42 : 244.

> "அரவுரி..................துகிற்கொடி விசர்ப்பன"
>
> —கம்பராமாயணம். சித்திரகூடம். படலம்-4

> "அரிவை துகினெகி ழல்கு லரவின்
> உரிவை விடும் பட மொத்தாள்"
>
> —குலோத்துங்க சோழன் உலா.

> "கூரெயிற் றரவின், உரிவை யன்னவா ளுண்டுகில்"
>
> —பாகவதம். 10. கோவியர் துகில் 9.

> "பையர வுரியி னன்ன நடைபடாம்"
>
> —திருவிளையாடற் புராணம். திருமணப்படலம் 147.

சங்க காலத்தில் வழங்கிய 'அரவுரியன்ன அறுவை' என்ற உவமையையே அக் காலத்திற்குச் சிறிது பிற்காலத்தில் ஆட்சி புரிந்த பல்லவர்கள் காலத்தில் இருந்த பாணன் (Bana) என்ற வடமொழிப் புலவன் பயன்படுத்தி யிருக்கின்றான். இந்தப் புலவன் மாமல்லைக்கு வந்து கடற்கரைக் கோயிலைக் கண்டது பற்றியும் எழுதியுள்ளான். ஆதலின் இந்தப் புலவன் தமிழிலக்கியத்தில் கண்ட உவமையைக் கையாண்டதில் வியப்பில்லை. மாலதி என்பவள் காஞ்சுகம் என்ற உடையை அணிந்திருந்தாள். இந்த உடை நன்றாக வெளுக்கப்பட்ட நேத்திரம் என்ற துணியால் நெய்யப்பட்டு, பாம்பு உரித்த தோலைவிட மெல்லியதாய்க் கால்வரை வீழ்ந்து கிடந்தது என்று பாணன் கூறியுள்ளான். (Bana says that malati wore a gown 'Kānchuka' of white bleached 'netra' cloth lighter than a snake's slough flowing to her toes) பாணன் கூறிய உவமை தமிழிலக்கியத்திலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டதென்பதில் ஐயமில்லை.

காதம்பரி என்ற நூலும் மூச்சு விட்டால் கலையக் கூடிய மென்மையான ஆடையைப் பற்றிக் கூறுவதால் அந்த ஆடை பாம்புரித்த தோல் போன்று இருந்ததாகக் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும்.

'சுள்ளவக்கா' என்ற நூலில் 'வீலிவ' (veeliva), 'சர்ம பட்டா' முதலிய துகில்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றில் 'வீலிவ' என்ற ஆடை மூங்கில் இழையிலிருந்து நெய்யப்பட்டது என்று கூறப்பட்டுள்ளது. மூங்கில் இழையிலிருந்து ஆடை நெய்ய முடியாது. ஆனால், இதற்கு உண்மையான விளக்கம் சங்க நூல்களில் கிடைக்கின்றது.

"காம்புசொலித் தன்ன வறுவை யுடீஇப்
பாம்புவெகுண் டன்ன தேற னல்கிக்"
—சிறுபாணாற்றுப்படை 236-237.

மூங்கில் ஆடையை உரித்தாலொத்த மாசில்லாத உடையினை உடுக்கப்பண்ணி என்று உரை கூறப்பட்டுள்ளது. பாலாடை என்பதுபோல மூங்கிலின் உட்பகுதியில் ஒரு மெல்லிய தோல் உள்ளது. இதையே காம்பின் சொலி என்று சிறுபாணாற்றுப்படை கூறியுள்ளது. சொலி என்ற சொல் இன்றும் பேச்சுவழக்கில் தொலி என்று பயில்கின்றது. மூங்கிலின் உள்ளே உள்ள மென்மையான தோலைப் போன்ற ஆடை என்று சிறுபாணாற்றுப்படை கூறியது பொருத்தமாகும். பாலிமொழியில் மூங்கிலால் நூற்கப்பட்ட ஆடை என்று பொருத்தமின்றிக் கூறப்பட்டது. நச்சினார்க்கினியரும் உரைகூறுமிடத்து மூங்கில் முளையிற் பட்டையுமாம் என்று தவறாக மிகவுரை கூறினார். மூங்கில் முளைப் பட்டையிலிருந்து சிறந்த ஆடை நெய்ய முடியாது. தமிழ்நாட்டிலிருந்து ஆடைகளின் பெயர்களை எடுத்துக் கொண்டதோடு அதை வடமொழியில் மொழி பெயர்த்துக் கொண்டுள்ளனர். 'அட்டகதா' என்ற பௌத்த நூலில் 'ஹஸ்திசௌந்திகா' (Hasti soundika) என்ற பெயர் காணப்படுகின்றது. இதற்குக் கூறிய விளக்கவுரை வியப்பைத் தருகின்றது. யானையின் தும்பிக்கை என்று பொருள்தரும் இப் பெயரின் விளக்கமாக இந்த ஆடை மடிப்புகள் கொண்டு சோழப் பெண்களின் சேலையின் முன்தானை கீழே விழுந்தாற்போல் இருந்தது என்று கூறியுள்ளனர். இந்த ஆடை திருக்குறளில் கூறப்பட்ட முகபடாம் என்ற துகில் என்பதில் ஐயமில்லை.

"கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேற் றுகில்"
—குறள் 1087.

யானையின் முகபடாமும் மாதர் முலைகளில் அணிந்த மெல்லிய துகிலும் ஒத்திருந்தமையால் திருவள்ளுவர் இரண்டையும்

ஒப்பிட்டுக் கூறினர். சங்க காலத்தில் உயர்குலத்து மாதர் மார்பை மறைப்பதற்கு மெல்லிய துகில் ஆடையை அணிந்தனர். ஆயினும் துகிலின் மென்மையால் மார்பை முற்றிலும் மறைக்கமுடியவில்லை. 'அண்ணாந்தேந்திய' அழகிய இளமுலைகளை மறைக்கப் பயன்படுத்திய துகிலை யானையின் கூரிய ஏந்திய தந்தங்களை மறைத்த முகபடாத்திற்கு ஒப்பிட்டது பொருத்தமாகும். ஆனால், இந்த உவமையை நன்கு புரிந்து கொள்ளாது பௌத்த நூற் பெயருக்கு விளக்கம் கூறப்பட்டுள்ளது. படாம் என்ற ஆடை பட்டாடையாகவும் இருக்கலாம். யானையின் முகபடாத்தைச் சங்க நூல்கள் 'சூழி' என்றழைக்கின்றன. 'ஆச்சராங்க சுத்தா' (Acharanga Sutta) என்ற பௌத்த நூலில் 'அம்ச சினது கூலவான' (Hamsachihna du kulavana) என்ற ஒருவகை விலையுயர்ந்த ஆடையைச் செல்வர்கள் பயன் படுத்தியதாகக் கூறப்பட்டுள்ளது. அன்னப் பறவையின் உருவச் சித்திர வேலைப்பாடுடன் கூடிய துகிலாடை என்று கருதப்படுகின்றது. இது பட்டாடையாகவும் இருக்கலாம் என்று கூறப்பட்டுள்ளது. பல்லவர் காலத்தில் வாழ்ந்த 'தண்டி' (Dandin) என்ற புலவன் 'துகூலோ மணிய' (Dukulo maniya) என்ற துகிலாடையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளான். இது மணிகள் சேர்த்துத் தைத்த துகில் என்று தெரிகின்றது. மற்றும் இதே புலவன் 'அம்சதூல துகூல' (Hamsatula dukula) என்ற 'அம்ச தூளிகா மஞ்சத்துகில்' பற்றியும் கூறியுள்ளான். மேற்கூறியவற்றிலிருந்து துகில் எந்த ஆடைக்குரிய தமிழ்ப் பெயர், பௌத்த பாலி நூல்களிலும், வடமொழி நூல்களிலும் எந்த அளவு பரவலாகப் பயன்படுத்தப்பட்டது என்பது தெரிகின்றது.

சிலப்பதிகார காலத்தில் மதுரை மாநகரில் தொண்டியோர் வங்க வீட்டத்தில் கொண்டு குவித்த வணிகப் பொருட்களில் துகிலும் கூறப்பட்டுள்ளது. துகில் என்பதற்குப் பட்டு வர்க்கம் என்று அரும்பத உரையாசிரியர் கூறியுள்ளார். தூசு என்பதற்கு அடியார்க்கு நல்லார் பட்டு என்று பொருள் கூறியுள்ளார். ஆனால், துகில் எல்லாம் பட்டு வர்க்கமல்ல. அடியார்க்கு நல்லார் உரையில் பல துகில் வகைகளைப் பற்றிக் கூறியுள்ளார். அவை எல்லாம் சிலப்பதிகாரம் எழுதிய காலத்தில் இருந்திருக்க முடியாது. அடியார்க்கு நல்லார், தாம் வாழ்ந்த காலத்தில் வழங்கிய துகில் வகைகளை யெல்லாம் சிலப்பதிகார காலத்தில் வழங்கியவைபோல உரை கூறியுள்ளார். ஆயினும் அடியார்க்கு நல்லார் உரை கூறும் துகில்கள் சில சங்ககாலத்தில் கூறப்பட்டன. சில பிற்காலத்தில் வழங்கின என்பது தெரி

கின்றது. அவர் கூறிய துகில்களில் சில பருத்தியினால் ஆனவை. சில பட்டினால் ஆனவை. அடியார்க்கு நல்லார் உரையினால் பல சிறந்த துகிலாடைகளை நாம் தெரிந்துகொள்ள முடிகின்றது. இந்த ஆடைகள் எவையென்று இன்று தெரிந்து கொள்ளப் போதிய சான்றுகள் இல்லையாயினும் குறிப்பாகச் சில துகில் வகைகள் எவையென்று கண்டுகொள்ள முடிகின்றது. கோசியம் என்று முதலில் கூறிய துகிலாடை பட்டாடையாகும். இது சங்க நூல்களிலேயே கூறப்பட்டுள்ளது. பட்டாடைகளைப் பற்றிப் பின்னர்க் கவனிக்கும்போது இதன் விளக்கம் கூறப்படும். பீதகம் மஞ்சள் நிற ஆடையாகவும் பீதாம்பரமாகவும் இருக்கலாம். இதுவும் பட்டாடையாகும். பீதக அம்பரம் என்பது பீதாம்பரம் ஆயிற்று. சீனத்திலிருந்து வந்த ஒரு வகைப் பட்டு வகையைச் 'சீனம்பரம்' என்று தண்டி என்ற புலவன் கூறியுள்ளான். பச்சிலை என்பது பச்சை நிறமானதோ அல்லது பச்சை இலையைப் போன்று தொழில் செய்யப்பட்ட துகிலாடையாகவோ இருக்கலாம். அரத்தம் என்பது அரக்கு நிறமான சிவந்த துகில். இந்தத் துகில் சங்க காலத்திலும் இருந்திருக்கலாம். நுண்டுகில் என்பது துகில் வகைகளில் நுண்ணியதாகும். இது சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளதை ஏற்கெனவே விளக்கியுள்ளேன். சுண்ணம் என்பது வெண்மையான துகிலாகவோ அல்லது சுண்ணம்போல வெண்புள்ளித் தொழில் செய்யப்பட்ட துகிலாகவோ இருக்கலாம்.

வடகம் என்பது வட்டுடை என்ற ஆடையாக இருக்கலாம். இது தேவாரத்தில் கூறப்பட்டுள்ளது. இஃது ஒருவகை மேலாடையாகும். சங்க காலத்திலேயும் இருந்திருக்கலாம். பிற்கால நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. பஞ்சு இரண்டு என்பது இரட்டை இழையினால் நெய்யப்பட்ட ஆடை. பருத்தி ஆடையாக இருக்கலாம். பாடகம் என்பது சிலம்பு போன்ற காலணியைக் குறித்துச் சிலப்பதிகாரத்திலேயே வழங்கியுள்ளது. துகிலின் ஓரத்தில் சிலம்பு போன்று தொழில் செய்யப்பெற்ற ஆடையாக இருக்கலாம். கோங்கலர் என்பது கோங்கின் பூப் போன்ற பொன்மஞ்சள் நிறமான ஆடையாக இருக்க வேண்டும். கோங்கின் பொன்னிறம் கண்ணைப் பறிக்கும் அழகு வாய்ந்தது. கோபம் என்பது இந்திர கோபம் என்ற பட்டுப் பூச்சியின் நிறத்தில் இருந்த ஆடையாகும். இந்திர கோபத் துகிலைப் பற்றித் திருமுருகாற்றுப்படை கூறியுள்ளது. சங்க நூல்கள் இந்திர கோபத்தைப் பற்றிக் கூறியுள்ளன. சித்திரக் கம்பி என்பது சரிகைக் கம்பி ஊடே வைத்து நெய்த துகிலாடையாகலாம். குந்தி, கரிபல் என்பன குந்தி நிறத்தையும் கரிய

நிறத்தையும் கொண்ட ஆடைகளாகும். பேடகம் என்பது இன்றுபேட்டு என்றுகுறிப்பிடும் ஒருவகைத் துகிலாடையாகலாம். பரியட்டக்காசு என்பது பொற்காசுகளை ஓரத்திலே வைத்துத் தைத்த துகிலாடையாகும். 'வேதங்கம்' என்பது வேதாங்கத்திலே ஈடுபட்டோர் அணிந்த தனித்த ஆடையாக இருக்கலாம். புங்கர்க்காழகம் என்பது வெளிநாடான கடாரத்திலிருந்து இறக்குமதி செய்த ஆடையாகும். இந்த ஆடையைக் காளக ஆடை யென்று பிற்காலத்து நூல்கள் குறிப்பிட்டுள்ளன. தொண்டியோர் வங்க ஈட்டத்தின் வழியாகக் கொண்டு வந்ததாகச் சிலப்பதிகாரம் கூறும் துகிலாடை இதுவேயாகலாம்.

காழகத்தைப் பற்றிச் சங்க நூல்களில் குறிப்புகள் உள்ளன. இஃது ஒருவகை நீலநிற ஆடை. இதற்கு விளக்கம் பின்னர்த் தரப்படும். சில்லிகை என்ற துகிலாடை எதுவென்று குறிப்பாகவும் கூறமுடியவில்லை. தூரியம் என்பது தெய்வப் பூசைக்குரிய தூய ஆடையாகத் தெரிகின்றது. பங்கம் என்பது வங்கத்திலிருந்து வந்த ஆடையாகும். சிலப்பதிகாரமே 'வங்கச்சாதர்' என்ற ஒரு சிறந்த நீலத்துகிலைப்பற்றிக் கூறியுள்ளது. வடமொழி, பாலிமொழி நூல்களில் வங்க நாட்டுத் துகில்கள் கூறப்பட்டுள்ளன. தத்தியம் என்பது வடமொழி வேத நூல்களில் கூறப்பட்டுள்ளது. தோவத்தி என்று திருமுருகாற்றுப்படை கூறுவது இந்த ஆடையையேயாகும். அந்தணர் அணிந்ததாகக் கூறப்பட்டுள்ளது. வடமொழி நூல்களில் இப்பெயர் வழங்குகின்றது. தமிழில் வேட்டி என்று கூறும் ஆடையைத் 'தோத்தி' என்று வடநாட்டில் அழைப்பர்.

வண்ணடை என்பது பல வண்ணங்கள் உடைய துகிலாகலாம். கவற்றுமடி என்பது பல மடிப்புகளை உடைய துகிலாடையாக இருக்கலாம். நூல் பாப்பு என்பது விசேட வகையான யாப்புடைய நூலால் நெய்த ஆடையாக இருக்கலாம். திருக்கு என்பது திருகிய இழைகளால் ஆன நூலால் நெய்த துகிலாடையாக இருக்கும். தேவாங்கு என்பது தேவாங்கர் என்ற பட்டுநூல்கார சாதியினரால் நெய்யப்பட்ட பட்டாடையாக இருக்கலாம். தேவாங்க சாதியினர் இன்றும் மதுரை நகரில் நெய்யுந் தொழிலில் சிறந்துள்ளனர். இந்த இனத்தினர் தமிழ்நாட்டிற்குப் பிற்காலத்திலே வந்தனர். வடநாட்டில் துருக்கர் படையெடுப்பில் அல்லல்பட்டுத் தமிழ்நாட்டிற்கு வந்தவராவர். சிலப்பதிகார காலத்தில் இவர்கள் தமிழகத்திற்கு வந்திருக்க முடியாது. பொன்னெழுத்து என்பது பொன்னிழையால் சித்திரத் தொழில் செய்த ஆடையாகும்.

எழுத்து என்ற பெயர் ஒருவகை ஆடையைக் குறித்துத் தமிழிலக்கியத்தில் வழங்கியுள்ளது. குச்சரி என்பது குசராத்து மாநிலத்திலிருந்து வந்த ஆடையாகலாம். கூர்ச்சரம் என்ற பெயர் இடைக்காலத்தில் தோன்றியதாகும். தேவகிரி என்பது 'தியோகிரி' (Deogir) என்ற ஊரின் பெயரால் தோன்றிய ஆடையாகும். இந்த ஊர் இப்போது அவுராங்காபாத் என்ற பெயரில் வழங்குகின்றது. இந்து அரசர்களும் துக்ளக் என்ற துருக்க அரசனும் ஆண்ட தலைநகரமாகும். இந்த ஊர் இன்றும் பட்டாடைக்கும், பட்டுக்கம்பள ஆடைக்கும் பெயர்பெற்றதாக விளங்குகின்றது. இந்தத் தேவகிரி ஆடையும் இடைக்காலத்ததாகும். இளங்கோவடிகள் காலத்தது அன்று. 'காத்தூலம்' என்ற ஆடையைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. இறஞ்சி என்பது மலையாளத்திலும் பண்டைத் தமிழிலும் மகிழ மரத்தைக் குறிக்கும். ஆதலின் மகிழமரத்தின் பூப்போன்ற தொழிலமைந்த ஆடையாக இருக்கலாம். வெண்பொத்தி, செம்பொத்தி, பணிப் பொத்தி என்ற ஆடைகள் பொத்திப்படுக்கும் தடித்த ஆடைகளாக இருந்திருக்கலாம். வெண்பொத்தி வெண்ணிறமானதாகவும் செம்பொத்தி செந்நிறமானதாகவும் இருக்கலாம். பணிப்பொத்தி என்பது தொழில் செய்யப்பெற்ற பொத்தி ஆடையாக இருக்கலாம். இந்தப் பெயர் பனிப்பொத்தியாகவும் இருக்கலாம்.

பனி என்ற சொல் குளிர்சுரத்தில் நடுங்குவதை மலையாளத்தில் குறிக்கின்றது. சிலப்பதிகாரத்தில் இந்த நோய் பனி என்ற பெயரில் குறிப்பிடப்பட்டுள்ளது. குளிரால் நடுங்கும் பனி நோய்க்காகப் பொத்திப்படுக்கும் துணி என்று கருதலாம். பொத்தி என்ற பெயர் இக் காலத்தில் துப்பட்டி என்று கூறும் துணிக்கு வழங்கிய பெயராகத் தெரிகின்றது. பொத்தியார் என்றொரு புலவர் பெயர் சங்க காலத்தில் காணப்படுகின்றது. இன்றும் 'போத்திக்கொள்' என்ற வழக்கு குளிரைத் தாங்கும் துணியால் மூடி மறைப்பதற்கு வழங்குகின்றது. சங்ககாலத்தில் 'பொதிந்து' என்ற வழக்கு இருந்தது. போர்வை என்ற சொல் இன்று குளிரைத் தாங்கும துணியைக் குறித்து வழங்குகின்றது. பொத்தி என்ற சொல் இன்றும் மூடி மறைப்பது என்ற பொருளில் வழங்குவதால் பொத்தி என்று வழங்கும் ஆடைகள் போர்வைகளையே குறிப்பிடும் என்பது தெளிவாகின்றது. அடியார்க்கு நல்லார் பல துகிலாடைகளைக் கூறியிருப்பினும் சிலவே சங்க காலத்தில் வழங்கினவையாகும். இவற்றில் பல இடைக் காலத்தில் வழங்கியவையாகும். இவற்றை மேலும் ஆராய்ந்தால் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். (தொடரும்)

# ‘செந்தமிழ் வழங்கும் திருச்செந்தூர்’

[பேராசிரியர் கோ. வே. பெருமாள், எம்.ஏ., பி.டி.]

"செந்தமிழ் மணக்கும் திருச்செந்தில் வேலனே !
சிறுதேர் உருட்டி யருளே"[1]

முன்னுரை :

வரலாற்றிற்கு முந்திய—பிந்திய காலங்கள் அனைத்திலுமே வான்புகழுற்ற சீரிடமாக, ‘தண்பொருநை (தாமிரவருணி) யாறு’ நிறைவுறும் கழிமுகம் திகழ்ந்து வருகின்றது ! இப் பொருநை யாறு கடலொடு கலக்கும் கழிமுகத்திற்கு வடபால், ‘கொற்கைக் கோநகர்’ கொலு வீற்றிருந்தது ! தென்பால், ஆத்தூரும், அழகிய திருச்செந்தூரும் அமைந்துள்ளன. இக் கடற்கரை, தென் தமிழ் நாட்டின் துறைமுகமாகவே துலங்கியது; வரலாற்றுச் சிறப்பும், பிறநாட்டு வாணிகச் சிறப்பும் கொண்டு வயங்கியது. வடக்கே, ‘கொற்கை’ தெற்கே, ‘செந்தூர்’ வளம்பல தந்தன ! இன்று கொற்கை தந்த கோநகர் மறைந்தது; ஆனால், தெற்கே ‘செந்தூர்’ மாநகர் என்னும் மதிப்பைப் பெற்றுச் சிறந்தொளிர்கின்றது. அன்றும், இன்றும், என்றுமே ‘திருச்செந்தூர்’ அழகு நகராகவே திகழ்கின்றது; சில் வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவினர் ஆகிய மக்களுக்கு என்றென்றும் மெய்ப்பொருள் விளக்கும் திருவிடமாகவே திகழ்கின்றது !! இத் திரு நகரை நம் நாட்டினரும், பிற நாட்டினர் பலரும் வந்து வந்து பாராட்டிப் போற்றியுள்ளனர்.

திருச்செந்தூர் :

திருநெல்வேலி மாவட்டத்திலே, குற்றாலமலைச் சாரலை, மக்கள் உடல் நலத்திற்கு ஏற்ற மாமருந்து என்று மதித்துப் போற்றுகின்றனர்; திருச்செந்தூர் கடற்கரை, மக்கள் உடல் நலத்திற்கு உதவுவதோடு, உள்ளம் நலம் பெறவும் உயிர் செம்மையுறவும் உதவுகின்றது என்று உணர்த்துகின்றனர். அலைவாய், சீரலைவாய், செந்தில், செந்தூர், திருச்செந்தில், திருச்செந்தூர் என்பன ஒரு பொருள் உணர்த்துவனவே—ஓரிடத்திற்கு உரியனவே யாகும். ‘‘சீவனும் அணுவும் ‘செந்து’ ஆகும்’;[2] என்பது பிங்கல நிகண்டு. இதனால், ‘செந்து’ என்னும் சொல்,

---

1. பகழிக் கூத்தர் : திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ் (கழக வெளியீடு-89) செய்யுள்-96.

2. பிங்கல நிகண்டு : 537.

'உலகின் இன்னுயிர்' என்னும் பொருளை உணர்த்துகின்றது; 'உலகின் நுண்பொருள்' என்ற நுட்பத்தினை உணர்த்துகின்றது. உலகின் ஒப்பும் உயர்வும் அற்ற ஓரிடம் அணுவினுக்கு அணுவாக மிகச் சிறியதாகத் தெரியினும், உலகின் ஆருயிர் போன்ற சீரிடம் என்பதைச் 'செந்து' என்னும் சொல் விளக்கி நிற்கின்றது அல்லவா? 'இல்', 'ஊர்' என்ற பொருளில் பயன்படுத்தப் பெறுகின்றது. மருது + இல் = மருதில், 'மருதூர்' என்று வழங்கப் பெறுவதைப் பார்க்கின்றோம். இடை மருதில், இடை மருதூர் என்றும், திருவிடை மருதூர் என்றும் வழங்கப் பெறுகின்றது. மயிலாப்பில் (மயில் + ஆப்பு + இல்), மயிலாப்பூர் (மயில் + ஆப்பு + ஊர்) என்று வழங்கக் காண்கின்றோம் அல்லவா? இவை போன்றே, 'செந்தில்' (செந்து + இல்) 'செந்தூர்' (செந்து + ஊர்) என்று வழங்கப் பெறுகின்றது. எனவே, 'செந்தில்' என்று சொல்லினும், 'செந்தூர்' என்று செப்பினும் பொருள் ஒன்றே ஆகின்றது. 'திரு - கண்டாரால் விரும்பப் பெறும் தன்மை' என்றார் ஓர் உரையாசிரியர். "திருவிலக்குமியும் செல்வமும் ஆகும்"[3] என்பது பிங்கலம். இந்த மங்கல முன் அடைமொழியைத் தமிழர் சீர்பெறும் இடமெல்லாம் சேர்த்தே வழங்குவர்! ஆதலின், இத் திருவிடத்தினைத் திருச்சீர் அலைவாய், திருச்செந்தூர், திருச்செந்தில் என்று சொல்லி மகிழ்ந்தனர். 'பழந்தமிழர் பண்பாடு உறைகின்ற திருநாடு, தென்பாண்டி நாடே' என்பதை எடுத்துக் காட்டும் சான்றாகவே, செந்தூர் விளங்குகின்றது! இதனைத் 'தென்னாட்டின் திலகம்' என்று சொல்வது மிகையாகாது!

### செந்தூரின் சிறப்பு :

தமிழர் நாகரிகத்தை—தண் பொருநைப் பண்பாட்டை—தெளிவுபடுத்தும் சீரிடங்களில், செந்தூரும் ஒன்றாகும். நெஞ்சம் மறக்க இயலாத—நினைவு அழிய இயலாத—நெடும்புகழ் பூத்த இடங்களில், இச் செந்திலும் ஒன்று என்பதை நேர்மையுள்ளத்தவர் எவராலும் மறுக்க இயலாது! திருக்கோவிலுக்கு முன்னர், கண்ணுக்கு எட்டிய அளவுக்குக் காட்சி தரும் கடலின் இயற்கை அழகினை எண்ணி வியவாதவர் உண்டோ? பத்துப் பாட்டின் தொடக்கமே, இக் காட்சியின் படப்பிடிப்புத் தானே!

"உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்(கு)
ஓவற இமைக்கும் சேண்விளங்(கு) அவிர்ஒளி".[4]

---

3. பிங்கல நிகண்டு : 613.
4. நக்கீரர்—பத்துப் பாட்டு : திருமுருகாற்றுப் படை—1—3.

"உலகம் உருண்டை வடிவினதே' என்பதை உறுதியாகத் தெரிவதற்கு என்னென்ன வெல்லாமோ முயற்சிகள் நடந்தனவாகக் கேள்வியுறுகின்றோம்! ஆனால், திருச்செந்தூரின் கடற்கரை மணல் மேட்டிலே நின்றுகொண்டு, கடற்காட்சியை நோக்கினால், ஓர் உண்மை புலப்படாமல் போகாது! 'உலகம் உருண்டையே' என்பதை உறுதியாகவே ஒப்புக் கொள்வர்! இரவு நேரங்களில், எல்லையற்ற வானவெளியிலே எண்ணற்ற கோள்களின் இயக்கத்தை எளிதாக உணரலாம். காலை நேரத்திலே, கதிரவனின் காட்சி, நீலமயில்மீது நிலவும் முருகனையே நினைப்பூட்டுவதைக் காணலாம். ஏதோ ஓர் ஆற்றல் இம் மண்ணையும் விண் வெளியையும் மாட்சிமையுறச் செய்கின்றது என்பதை மனத்திலே தெளியலாம்! இவ்வாறு, இயற்கை யியல்பினை எண்ணவைத்து, இறைமை நினைவை எழுப்ப வல்ல எழிலிடமே, 'திருச்செந்தூர்' என்பதை நன்றாகத் தெரிந்து கொள்ளலாம்.

நாழிக் கிணறு :

அங்கே வியந்து போற்றும் மாண்புகளில், 'நாழிக்கிணறு' என்பது ஒன்று ஆகும். உப்பு நீர்க் கடல் ஓரத்திலே, உவகையூட்டும் ஒரு நன்னீர் ஊற்று! அள்ள அள்ளக் குறையாத—அளவுக்குமேல் பொங்காத—அருமைக் கிணறு!! அதுவே, 'நாழிக் கிணறு' என்று நவிலப் பெறுகின்றது! நாழி உருவிலே, ஆறு அடி ஆழத்திலே, ஓரடி அகல விட்டத்திலே அமைந்துள்ளது! இந்த உள்கிணறு, 14 அடிச் சதுரத்திலே 24 அடி ஆழத்திலே ஆக்கப் பெற்றுள்ள ஒரு பெருங்கிணற்றின் உள்ளே அமைந்துள்ளது! இதனைக் 'கந்த புட்கரணி' என்கின்றனர்! அன்பர்கள் கடலாடிய பின்னர், நாழிக் கிணற்று நன்னீரிலே வந்து நீராடி உடல் நலன் பேணுகின்றனர். இஃது, ஔவையார் பாடியுள்ள அழகிய மூதுரை வெண்பாவை நினைப்பூட்டுகின்றது :

"............................—கடல்பெரிது
மண்ணீரும் ஆகா(து); அதனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும்."[5]

மணல் மேடிட்ட ஓர் இயற்கைக் கடற்கரைக் குன்றிலே, ஓங்கி உயர்ந்த கோபுரம், செம்மாந்து வேல் வடிவுபெற்று இலங்குகின்றது. ஐந்து கல் சுற்றளவுக்கு அப்பால் வருவோர்க்கும் அக் காட்சி பேரின்பம் நல்குகின்றது! திருநெல்வேலிக்குத் தென் கிழக்கே 36 கல் தொலைவில் கடற்கரையில் இத் திருச்-

5. ஔவையார் : மூதுரை : 12.

செந்தூர் இருக்கின்றது. தென்னகத்திலே பயணிகள் விரும்பும் ஒரு திருநகராகவே, இது திகழ்ந்துகொண் டிருக்கின்றது. இங்கே, திருக்கோவில் அமைப்பு, தெய்வ அன்பர்களைத் தெளிவுறுத்துகின்றது! புதுப்புதுக் கட்டிடச் செயற்கைச் சிறப்புகள், இச் சீர் நகரை மேன்மேலும் புகழாரம் பூணச் செய்கின்றன.

வள்ளி குகை:

இத் திருக்கோவிலின் வடபால் வளமான குகை ஒன்று காணப் பெறுகின்றது! இதனை 'வள்ளி ஒளித்த வள நாடு' என்கின்றனர். இத் திருக்கோவிலின் உட்சுற்றுக் கற்சுவர்களில் பல பழங்காலக் கல்வெட்டுக்கள் காணப்பெறுகின்றன! அவை, வரலாற்றுச் சிறப்பு மிக்கன. இத் திருக்கோவிலின் உள்ளே முருக உருவின் அமைப்பு, வழிபடுவோரின் இதயத்தை ஈர்க்கின்றது! இனம் புரியாத ஓர் இதயத்தூய்மை எழுகின்றது! நாத்திகரையும் நல்வழிப்படுத்துகின்ற ஓர் ஆற்றல் இயல்பாகவே இங்கு இயங்குகின்றது! இங்கே பன்னீர் இலையில் வழங்கப் பெறும் திருநீறு, பலவகைப் பிணிகளை நீக்கும் பாங்கு பெற்றுள்ளது என்று பாராட்டுவர். ஆதலின், கடவுள் பக்தர்கள் கோடி கோடியாக இங்கு வந்து கொட்டுகின்றனர்! இவ்வாறு, செறிந்து காணப்பெறும் செந்தூரின் சிறப்பினை என்னென்பது?

முருகு முகிழ்க்கும் முன்றில்:

தமிழ் மாநிலத்திற்குத் தனி வரலாறு உண்டு! அதிலே, தென்னாட்டின் பொன்னேடாகத் திகழ்வது தண் பொருநைக் கரைச் சமவெளி என்று புரிகின்றோம். தண் பொருநைக் கழிமுகத்துத் தென்கரையிலே 'செந்தூர்' திகழ்வதைப் பார்க்கின்றோம். தொன்மை மிகு தென்னாட்டின் தோற்றம் மிகுந்த சாயலையே அங்கே கண்டு களிக்கின்றோம். நீண்ட நெடுங்காலமாக நின்று நிலைத்த அக் கடற்கரை, 'அழகுக் காட்சி' அருளுவதைக் காண்கின்றோம். அதனால், அச் செந்தூரிலே மெய்ப்பொருள் காட்டும் மெய்யுணர்வு தோன்றுகின்றது; செய்பொருள் காணும் செறிவு இலங்குகின்றது; உண்மை இன்பம் ஒளிர்கின்றது. அங்கே, காலைக் கதிரவன் கடலிலே தோன்றும் காட்சி, கற்றுணர்ந்தோர் போற்றும் மாட்சியாக மிளிர்கின்றது. அஃது, 'முருகு' என்னும் நுண்பொருளை முகிழ்விக்கின்றது; உலக முழுமுதற் பொருளை உணர்த்துகின்றது! பிங்கலமுனிவர்,

"இளமையும் நாற்றமும் கள்ளும் விழவும்
முருக வேளும் அழகும் முருகே"[6]

6. பிங்கலந்தை: 3977.

என்று தம் பிங்கலந்தை நூலிலே பெய்து வைத்துள்ளார்! இதனால், இயற்கை யழகினை 'முருகு' என்னும் சொல்லால் இயம்பினர் எனலாம். எனவே, இந்த எழில் தவழ் இடத்தை, 'முருகு முகிழ்க்கும் முன்றில்' எனலாம்!

"மலையிடை வாழ்ந்த தமிழ்மக்கள் தங்களுக்குக் கண் கூடாகக் காட்சியளித்த இயற்கையை அடிக்கடி கண்ணுற் கண்டனர்; உள்ளத்தால் உவந்தனர்; இடையறாது நினைந்தனர்; அதன்கண் படிந்த வாழ்வு நடத்தினர். அதன் பயனாக அவர்கள், இயற்கையினுள் பிரிவின்றி விராவி நிற்கும் அழகையும், அழகின் மாறாத இளமையையும், இளமையில் ஊறும் அழியா மணத்தையும், இவையுடைய ஒன்று எல்லாவற்றையுங் கடந்து மாறுதலின்றி ஒளிரும் தன்மையையும் கண்டார்கள். இந்த அழகு, இளமை, மணம், கடவுள் தன்மை ஆகிய இயல்புகளைக் கொண்ட ஒன்றைப் பண்டைத் தமிழ்மக்கள் 'முருகு' என்னும் சொல்லால் அழைத்துப் போற்றினார்கள். 'முருகு' என்பது பொருள் பொதிந்த ஒரு சொல். அம் முருகினை உயர்திணை ஆண்பாலாக்கி, முருகு+அன்='முருகன்' என்றனர்!"[7]

'வேள்'—விருப்பம். விருப்பத்தைத் தரும் 'அழகி'னை—'நிலத்'தினை வேள் என்றனர்; 'அழகு' அடிப்படையிலே 'முருகவேள்', 'மன்மத வேள்' என்றனர்! 'நிலம்' என்னும் அடிப்படையிலே, 'வேளார்'; 'வேளாளர்'; 'வேளிர்'; 'வேளாண்மை' என்றனர்! 'முருகு' என்பதற்குச் 'செவ்வேள்' என்றும் சொல்லமைத்தனர்! இந்த இயற்கை இன்பத் திருவிடத்தைக் கலைஞர்கள் கண்டனர்; புலவர்கள் பா புனைந்தனர்; தவ மாண்பினர் தொழுது ஏத்தினர். எனவே, செந்தமிழ்ப் பாக்களும், செந்தமிழ் நூற்களும் இச் 'செந்தில்' மாநகரை அடிப்படையாகக் கொண்டு செறிந்து எழுந்தன.

செந்தமிழ் வழங்கும் செந்தூர் :

இயற்கை வழியே அழகினைக் காண்பதற்கு ஏற்ற இடமாகச் 'செந்தூர்' இலங்கியது! இங்கே, பழந்தமிழர் இறைமை உணர்ந்து தொழுதனர்; கடவுளை, அழகுப் பொருளாகவே பார்த்தனர்; படிந்தனர்! அழகை அல்லது முருகைப் பொருளாகக் கொண்டே வழிபாடு நிகழ்த்தினர்! அகத்தியர், 'பொதிகைத் தமிழ் மன்றம்', 'செந்தூர் தமிழ்ச் சங்கம்' அமைத்துச் செவ்வேளை வழிபட்டார் என்பர்! நக்கீரர் 'முருகாற்றுப்படை'

7. திரு. வி. க. (கலியாண சுந்தரனார்): முருகன் அல்லது அழகு (1954) பக்கம் : 33-4.

நல்கினுர்; மதுரை மருதன் இளநாகனுர் புறப்பொருள் வழியே வண்ணத் தமிழ்ப் பாடல் வழங்கினுர்.[8]; பரணர் அகப் பொருள் வழியே பைந்தமிழ்ப் பாடல் பாடினுர்[9]; பிறபிற வழிகளில் பெயர் தெரிய இயலாத பழந்தமிழ்ப் புலவர் செந்தூரில் நின்று செந்தமிழ் வழங்கினுர்[10]; அங்கே இளங்கோ வடிகள் இன்கவி ஏற்றினுர்; நாவுக்கரசர் நற்றமிழ் நயந்தே நவின்ருர்; அருணகிரியார் அழகுத் திருப்புகழ் ஆக்கினுர்! 'குமர குருபரர்' ஐந்தாவது வயதிலே குலாவு தமிழிலே 'கலிவெண்பா' பாடி, ஊமை நீங்கப் பெற்ருர்; படிக்காசுப் புலவர் பழகு தமிழிலே பாடினுர்; பகழிக் கூத்தர் 'பிள்ளைத் தமிழ்' பகர்ந்தார்; கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச அடிகளாரும், வண்ணச் சரபம் தண்டபாணி அடிகளாரும் இவ்வாறே செந் தூரிலே வந்து செழுந்தமிழ் பாடி மகிழ்ந்தனர்! சான்ருேர்கள் செந்தூரில் வந்து அருவிய செந்தமிழ்ப் பாக்கள் பலப்பல என லாம்! எனவே, 'செந்தூரில் வயங்கும் செவ்வேள், செந்தமிழ்க் கடவுள்' ஆனுர். 'செந்தமிழ் வழங்குந் திருச்செந்தூர்', கற்பவர் சிந்தையிலே களிப்புத்தேன் ஊட்டிச் செழிப்புறுத்துவதைக் காணலாம்.

"...சிந்தையே! தென் திசைத் தென்றல்வீ சும்பொழில்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே!"[11]

---

எழுத்திமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து—ஒழுக்கமுடன்

இம்மைப் பிறப்பில் இருவா தனையகற்றி
மும்மைப் பெருமலங்கள் மோசித்துத்—தம்மைவிடுத்து

ஆயும் பழைய அடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய

கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
அடியேற்கு முன்னின் றருள்.

—திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா.

---

8. மதுரை மருதன் இள நாகனுர் : புறநானூறு—79.

9. பரணர் : அகநானூறு—266. மருதம்.

10. தொல்காப்பியம் – பொருள் — களவியல்—23; நச்சினர்க் கினியர் உரைமேற்கோள்.

11. அருணகிரிநாதர் : (திருப்புகழ்) திருச்செந்தூர் திருப்புகழ். —23.

# தமிழ்த்தாய் வாழ்த்து

[புலவர் தி. நா. அறிவுஒளி, எம். ஏ]

## க. அணியடி பணிந்தோம்

### முகநிலை

அணியடி பணிந்தோம் அன்பால் வணங்கி
மணிபெறிற் றமிழே! மாண்பார் தாயே!

(அணி)

### இடைநிலை

எமக்கருள் தருவாய் எம்முயிர்த் துணையே!
நமக்கறம் பொருளின்பம் தரும் அணியே!

(அணி)

### முரிநிலை

அன்பறத் தமிழே! இன்பநல் லமிழ்தே!
என்புற இனிக்கும் நன்மொழிக்கரசே!
முந்துற முளைத்த முத்தமிழ்த் திருவே!
செந்தனிச் சுடரே! சீர்வளர் கலையே!

(அணி)

## உ. உள்ளங் கவர்ந்தவள் !

### முகநிலை

உள்ளங் கவர்ந்தவள் நீயே!—உலக
மொழிகளை உயிர்த்தநற் றாயே!—என்

(உள்ளம்)

### இடைநிலை

கள்ளம் அறியாக் கலைமாத் தமிழே!
உள்ளம் உயர்த்தும் உணர்வார் அமிழ்தே!

(உள்ளம்)

### முரிநிலை

உயிர்மெய் சார்பினை எழுத்தாய்க் கொண்டாய்
ஒலியின் ஆர்வமே இசையாய்க் கொண்டாய்
செயிரில் மாட்சியைப் பொருளாய்க் கொண்டாய்
செழித்த யாப்பினை அணியாய்க் கண்டாய்

(உள்ளம்)

நாவிற் கெளிய பேச்சு மொழிநீ!
நாட்டுக் கினிய ஆட்சி மொழிநீ!
பாவிற் செழித்த பாட்டு மொழிநீ!
பாரிற் சிறந்த வாழ்க்கை மொழிநீ!

(உள்ளம்)

———

கழக ஆட்சியாளர்

சைவத்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்களின்

# முத்துவிழா

[81 ஆவது பிறந்தநாள் விழா]

தமிழ்நூல் வெளியீட்டுத் துறையில் தலைசிறந்து விளங்கும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைத் தொடர்ந்து ஐம்பத்தேழு ஆண்டுகளாக இடையறாது நடத்திவரும் தமிழ்நூல் காவலர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் 'முத்துவிழா' 7—10—77 வெள்ளியன்று சென்னை-1. வணிகவைசிய திருமண மண்டபத்தில் சீரும் சிறப்புமாக நடைபெற்றது. நெல்லையிலிருந்து எழுந்தருளிய சிவத்திரு. இராமலிங்க தேசிகர் சடங்குகளை முறையாக நடத்திப் பிள்ளை அவர்களுக்கும் அவர்தம் இல்வாழ்க்கைத் துணைவியார் திருவாட்டி சு. மங்கையர்க்கரசி அம்மையாருக்கும் 'சிவதீக்கை'யும் செய்து வைத்தனர். சடங்குகளனைத்தும் தமிழ் முறைப்படியும் சிவாகம முறைப்படியும் திருமுறை, தமிழ்மறை இசைப் பாடல்களுடனேயே நடைபெற்றன. திருமுறை இசைச்செல்வர்கள் திருவாளர் கூத்தரசு, புண்ணியகோடி ஆகியோர் சடங்குகளின்போது திருமுறைப் பாடல்களை இசையுடன் பாடினர். விழாவையொட்டி மாலை வரவேற்பின்போது இவர்கள்தம் 'இன்னிசை நிகழ்ச்சியும்' நடைபெற்றது.

விழாவிற்குத் திரு. பிள்ளையவர்களின் உற்றாரும் சுற்றத்தாரும் சூழ வந்திருந்து சிறப்பித்தனர். நீதிபதி எஸ். மகராசன், திரு. அ. உத்தண்டராமபிள்ளை, ஐ. ஏ. எஸ். (ஓய்வு), திருவாளர்கள் எஸ். ஆர். வி. அரசு, பி. கே. பெருமாள், ஆ. சிதம்பரம் பிள்ளை, டாக்டர் திருவேங்கடம், டாக்டர் லோக முத்துக் கிருட்டிணன், டி. வி. இலக்குமணசாமி, வழக்கறிஞர் நெ. வள்ளிநாயகம் பிள்ளை, எஸ். பி. நமசிவாயம், தலைமைப் பொறியர் (ஓய்வு) திருமலை, வி. செல்வக்குமார், ஆ. சண்முகம் பிள்ளை, மா. சண்முக சுப்பிரமணியம், டாக்டர் நம்பி ஆரூரன், சி. பரமசிவம் பிள்ளை, வை. குஞ்சிதபாதம் பிள்ளை, பி. வி. மார்த்தாண்டம், செந்தில் நெல்லையப்பன், கோ. முத்துப் பிள்ளை, ஆர். சுந்தரம் பிள்ளை, மறை. மாணிக்கவாசகம், மறை திருநாவுக்கரசு, புத்தனேரி ரா. சுப்பிரமணியம், அழ வள்ளியப்பா மற்றும் பெருமக்களும் பேரறிஞர்களும் விழாவில் கலந்து கொண்டனர்.

இரவில் மண்ணடி, செல்வவிநாயகர் கோயிலிலும், சென்னை மல்லிகேசுவரர் கோயிலிலும் நடைபெற்ற சிறப்பு வழிபாடுகளில் திருவாளர் பிள்ளையவர்கள் குடும்பத்துடன் கலந்து கொண்டனர்.

அதேநாளில் சிதம்பரம், மதுரை, திருப்பாதிரிப்புலியூர், திருவாமாத்தூர், பிரான்மலை, திருச்சி, பேரூர் ஆகிய திருக்கோயில்களிலும்

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, சுவாமிமலை, திருத்தணி, பழமுதிர்சோலை ஆகிய ஆறுபடை வீட்டுத் திருக்கோயில்களிலும் சிறப்பு வழிபாடுகள் நடைபெற்றன. திருவேற்காடு கருமாரியம்மன் கோயில், சென்னை, காளிகாம்பாள் கோயில், சென்னை மல்லிகேசுவரர் கோயில், பிள்ளையார் கோயில் ஆகியவற்றிலிருந்து அருட்பொருள்கள் விழாவிற்குக் கொண்டுவரப்பெற்றுத் திரு. பிள்ளையவர்கட்கும் அன்னார் குடும்பத்திற்கும் வழங்கப்பெற்றன.

விழாத் தலைவருக்குத் தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் தமிழ்ப் பேராசிரியர்களும் பெருமக்களும், பேரறிஞர்களும் வாழ்த்துரைகள் அனுப்பியுள்ளனர்.

## வாழ்த்துச் செய்திகள்

"தமிழன்பே உண்மையில் இவர்களை வாழ்விக்கிறது. அன்புணர்வு புறவுடலையும் செம்மைப்படுத்தும். மிகக் கருத்தாய் உடலை ஓம்பிவரும் இவர்கள் முறைமையும், சுறுசுறுப்பான எளிய அடக்கமான சிக்கன வாழ்வியலுமெல்லாம் தமிழ்நலம் ஓம்புதற்காகவே இறைவன் வரவிட்டதொரு தனிவருகையாய் இவர்கள் நல்வரவு திகழ்கிறது. இனிய நலம் உடையவர்களாய் மகிழ்வோடு மேன்மேலும் தொண்டுகள் செய்துவர இறைவன் திருவருளை அன்புடன் வேண்டுகின்றனம்."

—அருட்டிரு. அழகரடிகள், குருகுலம்.

முத்தமிழ் வாழ்வே முதற்குறிக்கோள் என்றுள்ளம்
வைத்தவ சுப்பையா வாழியரே—நத்தளவும்
மூத்து விழவயரும் மூவிரு பத்தேழிற்
புத்துயிர் கொண்டு புகுந்து.

—ஞா. தேவநேயப் பாவாணர், சென்னை

பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்என் றுரைத்த
வள்ளுவர் கூற்றைத் தெள்ளிதின் உணர்ந்து
உள்ளுவார் உள்ளம் உவகையில் திளைக்க
'நல்லவர் இவர்' என நானிலம் போற்ற
வல்லராய் வாழும் வளயார் பெரியார்
வாழ்நா ளெல்லாம் வண்டமிழ் வளரத்
தாழ்விலா துழைக்கும் தகவுடை அண்ணல்!
நம்பெரு முயற்சியால் நூல்கள் பலவும்
செம்மையாய் உலகில் செழித்துப் பயன்படக்

கண்ணையுங் கருத்தையும் கவரும் வனப்புடன்
'புண்ணியம் இதனிற் புகலுதற் கில்லென
யாவரும் போற்ற எழில்பெறப் பதித்துப்
பாவலர் நாவலர் பருணிகர் வாழ்த்த
எண்ணியாங் கெதையும் இயற்றியிவ் வுலகில்
எண்பா ணுண்டையும் இனிதே கழித்தீர்!
இன்னும் பல்லாண் டினிதே வாழப்
பொன்னம் பலவன் தன்னருள் சுரக்க
மனமொழி மெய்களால் வாழ்த்தி வணங்கித்
தினமும் வாழ்த்துவன் செழித்து வாழியே!

—மே. வி. வேணுகோபாலப் பிள்ளை, சென்னை

தண்டமிழ் நூல் பிழையின்றி நன்முறையில் நாட்டில்
தலைக்காட்டா அந்நாளில் தமிழ்நூல்கள் தம்மை
வண்ணமுறத் திருத்திமிக வெளியிட்டு மேலும்
வளம்மிக்க சங்கநூல் முதலாக உள்ள
எண்ணிலா நூல்கட்கும் புத்துரையும் ஈந்தே
இன்தமிழை வளர்த்துவிட்ட சுப்பையா எந்தல்
பண்ணவன்றன் திருவருளால் பல்லாண்டு வாழி!
பைந்தமிழ்க்குத் தொண்டாற்றி நீடூழி வாழி!

—அ. கி. பரந்தாமனுர், சென்னை

"நம் அன்னைமொழி வளங்குன்ருமல் வளர்ந்தோங்க வேண்டும் என்னும் குறிக்கோள் அவர்கள் வாழ்வின் என்றும் மாருக் குறிக்கோளாக இருந்து வந்திருக்கின்றது. இனியும் இருந்துவரும் என்பது திண்ணம். இக் குறிக்கோள் சிறிதும் வழுவாமல் இலங்கி வரவேண்டும் என்பது என் கோரிக்கை."

—கி. இராமலிங்கனுர், சென்னை

கழக ஆட்சியாளர் இன்னும் பல்லாண்டுகள் நல்ல உடல்நலத்துடனிருந்து நாட்டிற்கும், மொழிக்கும், மக்களுக்கும் நற்றொண்டு புரிந்து நல்வாழ்வு வாழவேண்டும் என இறைவனை வணங்கி வாழ்த்துகிறேன்.

—கி. ஆ. பெ. விசுவநாதம், திருச்சி.

"இப் பொன் நீ! இம் மணி நீ! இம் முத்து நீ!" என்று அப்பர் தேவாரம் பொன்விழாவைப் பற்றியும், மணிவிழாவைப் பற்றியும், முத்து விழாவைப் பற்றியும் சொல்லாமற் சொல்கிறது. சுப்பையா பிள்ளை அவர்கள் இல்லையானுல் எத்தனையோ தமிழ் நூல்கள் நமக்குக்

கிடைக்காமலே போயிருக்கும். அவர் தமிழுக்கும், தமிழ்நாட்டின் பண்பாட்டுக்கும் மிகச் சிறந்த பணியாற்றி யிருக்கிறார்.''

—வள்ளல் நா. மகாலிங்கம், சென்னை.

இருபது தலையிட்ட இருமுப்ப தகவையுறு
திருமிகு சுப்பையவேள் செந்தமிழ் உலகிதிலே
முருகிறை திருவருளால் முழுநல மினிதோங்கத்
திருவுடல் நலத்தோடு சிறப்புடன் வாழுகவே!

—சு. அ. இராமசாமிப் புலவர், கருப்பக்கிளர்.

''தமிழ் உலகுக்கு நல்ல தொண்டு ஆற்றிவரும் அப் பெரியவர் நூறு ஆண்டு விழாவினையும் காண்பதற்கு எல்லாம்வல்ல சிவபிரான் நீண்ட ஆயுளும் நோயற்ற யாக்கையும் வளமார் நலமும் வழங்கிட வேண்டு மென்று அவனருளாலே அவன் தாள் பணிவன்,''

—பர். சி. பாலசுப்பிரமணியன், சென்னை

''திறமை கண்ட இடத்துப் போற்றியும் பொய்மை கண்ட இடத்து அஞ்சாமற் கூறியும் துணை நின்றவர்களை என்றென்றும் பாராட்டியும் கழகத்தையும் தமிழையும் வளர்த்தவர்கள். பல சுப்பையா பிள்ளைகள் தோன்றினால் தமிழ் இந் நிலையிலா அசதியிடும்?''

—பர். வி. ஐ. சுப்பிரமணியம், திருவனந்தபுரம்.

வாழிய பெருந்தகை! வாழிபல் லாண்டே!
யாழிசை போல யாண்டும் புகழிசை
பரவியே வாழி! பாரிடை முருகன்
திருவருள் வழியெனத் தெளிகுவன் யானே!

—பர். சொ. சிங்காரவேலன், மாயூரம்.

''இறைவனின் இன்னருளால் சைவத்திரு வ. சு. அவர்கள் பல்லூழி வாழ்ந்து தமிழிற்கும் தமிழினத்திற்கும் பெருந்துணையாய் நின்றிலங்கத் திருவருளை வணங்குகின்றேன்.''

—கு. சுந்தரமூர்த்தி, சிதம்பரம்.

முத்துவிழா வென்ன மொழியகவை எண்பதனை
நத்துவப்பாற் கொண்டுமேல் நண்ணகவை—இத்தினத்தில்
கொண்டஅத் தாளுக் குலவுசுப்பை யாபிள்ளை
மண்டலத்தில் வாழ்க மகிழ்ந்து.

—முருகதாச அடிகள், பழனி.

"தாங்கள் நோயின்றி நூறுண்டு வாழவேண்டுமென்றும், தங்கள் தமிழ்த்தொண்டு தொடர்ந்து ஓங்கவேண்டுமென்றும் நான் விரும்புகின்றேன். வாழ்க! வளமெலாம் பெற்று வாழ்க!"

—மு. இரா. பெருமாள் முதலியார், சென்னை

"எண்பது அகவை யாயும் சைவத்திற்கும் தமிழுக்கும் அவர் செய்துவரும் தொண்டு ஒரு பல்கலைக் கழகமே தமிழுக்குச் செய்வது போன்றதாகும். அவர்கள் மேலும் பல ஆண்டுகள் தமிழுக்காக வாழ வேண்டும் என்று வாழ்த்தி இறைவனை வேண்டுகின்றேன்."

—பி. எல். சாமி, புதுவை.

எண்பதாவ தாண்டகவை எய்தி மகிழ்வுபெறும்
பண்பமையும் சுப்பையப்பேர் பற்றுமன்பர்—நண்பமையும்
உள்ளமுடன் பல்லாண் டுவப்பாக வாழ்ந்திடுக
வள்ளிமண வாளனருள் வாய்ந்து!

—புலவர் தி. மு. சங்கரலிங்கம், திருவாமாத்தூர்.

பொங்கும் அருவிக் குற்றாலப்
புனல்போல் பெருகும் புகழுடையீர்!
தங்கும் வண்மைத் தமிழோங்கத்
தணியாத் தொண்டில் தலைசிறப்பீர்!
மங்கை பாகப் பேரண்ணல்
மலர்த்தாள் என்றும் மறவாதீர்!
மங்கை பாகப் பேறுடையீர்
மல்கு நாளும் வாழியரோ!

—புலவர் இரா. இளங்குமரன், மதுரை.

புலவர் ஆ. பழனி, பேரா. ரம்போலா மாஸ்கரேனஸ், இலஞ்சி அ. இ. முத்துக்குமாரசாமி, கோ. வில்வபதி, தணிகை உலகநாதன், டி. வி. சபாபதி, எஸ். வடிவேல், கி. இல. பழனிச்சாமி, எம். இருட்டிணன், எல். நஞ்சப்ப செட்டி, மதுரை பரமசிவம், கி. சிதம்பரம் ஆகியோரும் மற்றும் பலரும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியுள்ளனர்.

———

# படிக்கும் பழக்கமும் பதிப்புத் துறையும்

'படிக்கும் பழக்கமும் பதிப்புத் துறையும்' என்பது பற்றிச் செல்வி நேயர்களின் சிந்தனைக்குச் சிற்சில குறிப்புகள் ஈண்டுத் தரப்படு கின்றன.

பள்ளி மாணவர்கள் (a) பள்ளி நூலகம் செயல் படாமை (b) மாண வர்கள் பொது நூல்கள் படிக்கும் பழக்கமின்மை. (c) பாடப் புத்த கத்தையும் பயிலாது வினுவிடை நூல்களையே பயிலல்

கல்லூரி மாணவர்கள் நிலையும் இதுவே. கல்லூரி நூலகங்கள் இருந்தும் மாணவர்கள் பயன்படுத்துவதில்லை—பயன்படுத்தினும்,

50% கதை நூல்கள் படித்தல்.

30% பாடப் புத்தகங்களை யொட்டிய நூல்களைப் படித்தல்.

10% பொழுது போக்கு.

10% பயனுள்ள பொது நூல்களைப் படித்தல்.

பள்ளியிலும் கல்லூரியிலும் மாணவர்களிடம் இப் பழக்க மின்மை யால் பட்டம் பெற்ற பின்னும் பொது நூல்களைப் படிப்பதில்லை.

கல்லூரியில் பணிபுரிபவர்களும் ஆராய்ச்சியில் ஈடுபடும் பொழுது தவிரப் பிற சமயங்களில் நூல்கள் படிப்பதில்லை.

அலுவலகங்களிலும் வங்கிகளிலும் பணிபுரிவோர் நல்ல ஊதியம் பெறினும் நூல்கள் வாங்குவதில்லை.

நூல்கள் படிக்கும் நேரத்தை இதழ்கள் கவர்ந்து கொள்ளுதல்—பட்டம் பெற்றோர் மேனுடுகளிலிருந்து வெளிவரும் கதை நூல்களையே விரும்பிப் படிக்கின்றனர்—சென்னையில் இத்தகைய நூல்களைக் குறைந்த கட்டணத்திற்கு வாடகைக்கு அளிக்கும் நூலகங்கள் பல உள்ளன. வெளியூர்களிலும் பழைய நூல்கள் விற்பனை செய்வோர் இதனைச் செய் கின்றனர்.

படிக்கும் பழக்கம் மக்களிடை இல்லை—நூல் விற்பனை குறைவு—பொது நூலகங்கள் வருவாயில் பெரும்பங்கு ஊழியர்களின் ஊதியத் திற்கே—நூல்கள் வாங்குவது மிகக் குறைவு.

கல்லூரி நூலகங்கள் பிற துறை நூல்களை வாங்குவது போலத் தமிழ் நூல்களை வாங்குவதில்லை.

தமிழர்களை அடுத்து வாழும் மலையாளிகளிடையே படிக்கும் பழக்கம் பெருகியுள்ளது. எந்த நூலும் விரைந்து விற்று விடுகிறது. தனிப்பட்டோர் நூல்களை விலை கொடுத்து வாங்கிப் படிக்கின்றனர். தமிழ்நாட்டில் இந் நிலையில்லை—தமிழ் நூல்களின் மொழி பெயர்ப்பு ருசியா, செக்மொழிகளில் 50,000 படிகள் அச்சிடப்பெற்று ஒரு திங்களுக்குள் விற்பனையாகி விடுகின்றன. தமிழில் 1000 படிகள் அச்சிட்டால் அவை விற்பனையாக ஏறத்தாழ 5 முதல் 10 ஆண்டுகள் ஆகின்றன.

தமிழ் மக்களிடையே படிக்கும் பழக்கம் பெருகி, நூல்கள் விற்பனை கூடினுல்தான் தமிழ் நூல் பதிப்புத்துறை வாழும், வளரும்.

———

# செய்திகளும் குறிப்புகளும்

## குடியரசுத் தலைவர் வாழ்க!



இந்தியத் துணைக்கண்டத்தின் ஆறுவது குடியரசுத் தலைவராய் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்ற மாண்புமிகு நீலம் சஞ்சீவ ரெட்டி அவர்கள் நுரையீரல் மருத்துவத்தின் பொருட்டுச் செப்டம்பர் தொடக்கத்தில் அமெரிக்கா சென்று மூன்று கிழமைகள் தங்கி இறையருளால் முழுநலம் பெற்றுத் திரும்பியுள்ளார்கள்.

உயர்திரு சஞ்சீவரெட்டி அவர்கள் திருவாளர் குமாரசாமி ராசா அவர்களை முதலமைச்சராகக் கொண்ட சென்னை மாநில அமைச்சரவையில் குடியிருப்பு ஒதுக்கீட்டுத் துறை அமைச்சராகப் பொறுப்பேற்றிருந்தார்கள். அவர்கள் உதவியினாலேயே இப்பொழுது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இருந்து நடைபெற்று வரும் பிராட்வேயிலுள்ள கட்டிடங்கள் கழகத்திற்குக்கிடைத்தன. கழகத்தின் நன்றி அவர்கட்கு என்றும் உரியதாகும். அவர்கள் நலத்துடன் இருந்து நாட்டுக்குரிய நற்பணிகளை மேன்மேலும் ஆற்றிச் சிறக்குமாறு திருவருளை வழுத்துகின்றோம்.

## வள்ளலார், காந்தியடிகள் விழா

தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் இயங்கி வரும் இராமலிங்கர் பணி மன்றத்தினர் பன்னிரண்டாம் ஆண்டு வள்ளலார் விழாவினையும், காந்தி அடிகளார் பிறந்தநாள் விழாவினையும் மயிலை இராசேசுவரி திருமண மண்டபத்தில் அக்டோபர்த் திங்கள் 1 ஆம் நாள் முதல் 9 ஆம் நாள் முடிய மிகச் சிறப்பாகக் கொண்டாடினர். நாள்தோறும் திரு. கிரிதாரி பிரசாத் அவர்கள் காலையில் கண்ணனின் கீதையைப் பற்றியும், மாலையில் 'வள்ளலார் காட்டிய பாதை' என்னும் பொருள் பற்றியும் உரையாற்றினர். இவ் விழாவினை யொட்டிக் கவியரங்கம், கலையரங்கம், வில்லுப்பாட்டு ஆகிய இலக்கிய நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

## அண்ணாமலைப் பல்கலைக் கழக நூல்கள் வெளியீட்டு விழா

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள 25 நூல்களின் வெளியீட்டு விழா 29—9—77 இல் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா

சாத்திரி மண்டபத்தில், பல்கலைக் கழக இணைவேந்தர் இராசா சர் முத்தையா செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சென்னை சட்ட மன்ற மேலவைத் தலைவர், சிலம்புச் செல்வர் ம பொ. சிவஞானம் அவர்கள் நூல்களை வெளியிட்டு அரிய உரை நிகழ்த்தினர். டாக்டர் ஆறு. அழகப்பனும் மற்றும் பல பேராசிரியர்களும் அறிஞர்களும் உரை யாற்றினர்.

## திரு. அகிலன் பெற்ற 'ஞானபீட' பரிசு

'சித்திரப் பாவை' என்னும் சிறந்த தமிழ்ப் புதினத்தை இயற்றிய திரு. பி. வி. அகிலன் அவர்கட்கு 'ஞானபீட' விருதினை 17—9—77இல், புதுதில்லியில் இந்தியத் தலைமை அமைச்சர் மாண்புடை மொரார்ஜி தேசாய் அவர்கள் வழங்கிச் சிறப்பித்தார்.

## அச்சுத் தொழிலுக்கு ஆதரவு - அமைச்சர் அறிவிப்பு

17—9—77 இல் சென்னையில் நடைபெற்ற அச்சகம், 'லித்தோ கிராப்' ஆகிய அச்சுப்பணித் துறையாளர் கழகத்தைச், செய்தித் துறை சுற்றுலா ஆகியவற்றின் அமைச்சர் திரு. ஆர். எம். வீரப்பன் அவர்கள் துவக்கி வைத்தார். அப்போது,

"ஒரு மாநிலத்தின் முன்னேற்றத்தை விளக்கிக் காட்டும் கண்ணாடியாகத் திகழ்வது அச்சுத்தொழில், கல்வியையும் அறிவையும் பரப்ப இஃதோர் இன்றியமையாத் தொழிலாகி விட்டது. இதற்கு எல்லா வசதிகளையும் செய்துதர, முதல்வரிடம் பரிந்துரை செய்வேன்" என்றும் கூறினார்.

## மாவட்டந்தோறும் சிறந்த எழுத்தாளர்கட்குப் பரிசு

1973க்கும் 1976க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் சிறந்த தமிழ் இலக்கியத்தை உருவாக்கிய நூலாசிரியருக்குப் பரிசு வழங்குவது என்ற திட்டத்திற்கிணங்க, எம். ஏ. சி. அறக்கட்டளையினால் ஏற்படுத்தப் பட்டிருக்கும் அண்ணாமலைச் செட்டியார் விருதினை 'உருவுகள்' என்னும் சிறந்த தமிழ்ப் புதினத்தை இயற்றிய ஆசிரியர் நீலா பத்மநாபன் அவர்கட்கு, தமிழக முதல்வர் திரு. எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் 30—9—77 இல் இராசா அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்ற விழாவில் வழங்கிச் சிறப்பித்தார். நூலாசிரியருக்கு ரூ. 10,000 மும் வெள்ளித் தட்டு ஒன்றும் பரிசாக வழங்கப் பெற்றன. இப் பரிசினை வழங்கிய முதல்வர் தமது பாராட்டுரையில் ஒவ்வொரு மாவட்டத்திலும் சிறந்த நூல் எழுதும் ஆசிரியர்கட்குப் பரிசு வழங்க அரசு திட்டமிட்டிருப் பதாகக் கூறினார்.

## 'இந்தி' திணிக்கப்படும் என்ற அச்சம் வேண்டாம்...ஆனால்!

18-9-77 இல் உத்திரப்பிரதேசத்தில் லக்னோவில் இந்தி மொழி விழா ஒன்றினைத் துவக்கிவைத்த தலைமை அமைச்சர் திரு. மொரார்ஜி தேசாய் அவர்கள் இந்தி பேசாத மாநிலங்களில் "இந்தி கட்டாயமாகத் திணிக்கப்படும் என்ற அச்சம் வேண்டாம்" என்றார். அவர் தொடர்ந்து பேசுகையில் "ஆனால் காலப்போக்கில் இந்தி இந்தியாவின் பொது மொழி என்று ஒப்புக்கொள்ளப்பெற்று அதற்குரிய இடத்தை பெறும். ஏனெனில் நூற்றுக்கு 60 பேர் இந் நாட்டில் இந்தி பேசுபவர்களாக இருக்கிறார்கள்" என்று கூறியுள்ளார்.

## தேவார ஓதுவார் மூர்த்திகள் சங்கத்தின் 21ஆம் திங்கள் வழிபாடும், செட்டிநாட்டரசர் ராஜா சர். அண்ணுமலைச் செட்டியார் பிறந்த நாள் விழாவும்

இவ் விழாக்கள் மேழ்ப்படப்பை, அருள்மிகு வீரட்டேசுவரர் திருக் கோயிலில் சிறப்பாகக் கொண்டாப்பெற்றது. சைதை. தேவாரம். நடராசன் தலைமையில் நடைபெற்ற வீதிபாராயணத்தில் 56 இல்லங் களில் சைவசமய குரவர் நால்வர் திருவுருவப் படங்கள் திறந்துவைக்கப் பெற்றுள்ளன.

## முதுபெரும் புலவர், மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர் களின் 82ஆம் பிறந்தநாள் விழா

புரசை, சுந்தரர் தமிழ்க் கல்லூரித் தலைவரும், முதுபெரும் புலவருமான, இலக்கணத் தாத்தா, கலைமாமணி உயர்திரு மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களின் 82ஆம் பிறந்தநாள் விழா 31—8—77 புரசை, கங்காதரேசுவரர் கோவில் தெருவிலுள்ள மாநகராட்சி உயர்நிலைப் பள்ளியில் திரு. ஒ. அ. கனகசபை, பி.ஏ., பி.டி. அவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றது. வித்துவான் இரா. உலகபாபு அவர்கள் வர வேற்புரை நிகழ்த்தினர். பேராசிரியர் அன்பு கணபதி, திருமதி புலவர் கே. இரத்தின காந்தி ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். இவ் விழா வில் திரு. ச. இரகுநாதன், பி.எசி. எழுதிய "நினைவுச் சுமைகள்" என் னும் நூலினை முதுபெரும் புலவர் அவர்கள் வெளியிட, அதனை டாக்டர் சி. பாலசுப்பிரமணியனுர் பெற்றுக் கொண்டார். வித்துவான் அ. சங் கரன் அவர்கள் நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## சோழபுரம் பழநியப்பா உயர்நிலைப்பள்ளியின் இலக்கியக் கழக நிகழ்ச்சிகள்

*11—8—'77* இல் சோழபுரம் பழநியப்பா உயர்நிலைப் பள்ளி இலக் கியக் கழகத்தின் சார்பில் நடைபெற்ற கூட்டத்தில் டாக்டர் கு. நம்பி ஆரூரன் அவர்கள் காந்தியடிகளும் தீண்டாமையும் என்னும் பொருள் பற்றியும், பேராசிரியர் மா. பா. குருசாமி அவர்கள் 'காந்தியடிகளும் கார்ல் மார்க்சும்' என்னும் பொருள் பற்றியும் அரிய உரையாற்றினர். பள்ளி ஆட்சியாளர் திரு. ப. இலட்சுமணன், பி.ஏ. அவர்கள் வரவேற் புரை ஆற்றினர்.

## சமக்கிருதத்தை மறவாதீர் என்கிருர் ஆளுநர்!

"சமக்கிருதத்தை மறப்பது என்பது நம் பெற்றோர்களை மறப் பது போலாகும். சமக்கிருத மொழியைப் பயில்வதும் பயிற்று விப்பதும் மீண்டும் உயிர்பெறுதல் வேண்டும். சமக்கிருதத்தைச் செத்தமொழி என்று நினைப்பதே தவறு. அஃது என்றும் உயிரோ டிருக்கும் மொழி. மனித குமுகாயம் வாழுமளவும் சமக்கிருதம் வாழ வேண்டும். இன்று இம் மொழி இந்தியாவில் அதிகமாகப் பேசப்படாவிடினும் மக்களுக்கு அதன்பால் ஒரு கவர்ச்சி ஏற்பட்

டிருக்கிறது. நம்முடைய சமயம், கலை, பண்பாடு அனைத்தும் சமக் கிருதத்தை அடிப்படையாகக் கொண்டதாகும்''

என்று 28—8—77 இல் சென்னையில் சமக்கிருத கழகத்தின் சார்பில் நடைபெற்ற சமக்கிருத நாள் விழாவிற்குத் தலைமை தாங்கிய தமிழக ஆளுநர் திரு. பிரபுதாஸ் பட்வாரி அவர்கள் குறிப்பிட்டார்.

## இலங்கைத் தமிழரின் அவல நிலை

கடந்த திங்கள் இறுதியில் இலங்கையில் தமிழர்கள் சிங்களவர்களால் தாக்கப்பட்டுப் பேரிழப்புகளுக்கு ஆளாகியுள்ளனர். நூற்றுக் கணக்கான தமிழர் உயிரிழந்தும் ஆயிரக்கணக்கான தமிழர் உடைமைகள் பாழ்படுத்தப் பட்டுமுள்ளன. இக்கொடுஞ் செயலினைக் கண்டிக்கவும் தமிழர் நிலையினை உலகிற்குணர்த்தவும் சென்னையிலும் தமிழகத்தின் பல ஊர்களிலும் கடையடைப்பு, கண்டன ஊர்வலம் முதலியன நடைபெற்றன. கலைஞர் கருணாநிதி தலைமையில் சென்னைத் தமிழர்கள் ஊர்வலமாகச் சென்று சென்னையிலுள்ள இலங்கைத் தூதுவரிடம் ஒரு விண்ணப்பத்தினைத் தந்தனர். தமிழகச் சட்டமன்றமும் கண்டனத் தீர்மானம் நிறைவேற்றிற்று. இந்திய நடுவண் அரசும் இதுபற்றி நடவடிக்கை எடுத்துள்ளது.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் சிலம்பு-௧, ௬௮ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| கழக ஆட்சியாளர் உயர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் செப். 77 நன்கொடை | ரூ 100 | 00 |
| கழக மேலாளர் உயர் திரு. ஆ. சுப்பையா பிள்ளை செப். 77 நன்கொடை | 5 | 00 |
| டாக்டர் புலவர் பொ. தெய்வநாயகி சோதி வண்ணையம்பதி, சென்னை-21. | 5 | 00 |
| உயர் திரு. மு. சுப்பையா, கழகக் குடந்தைக் கிளை மேலாளர் | 5 | 00 |
| உயர் திரு. பழ. சுந்தரேசன் அவர்கள், புதுக்கோட்டை (திருச்சிக் கிளை வழி) | 10 | 00 |
| * உயர் திரு. வி. திருமலை அவர்கள், I.O.B. சென்னை | 15 | 00 |
| * உயர் திரு. அ. ஆறுமுகம் அவர்கள், (சூரன்குடி) சென்னை | 101 | 00 |
| * உற்றார் உறவினர், நண்பர் ஆகியோர் முத்துவிழாவில் தட்டில் வழங்கிய அன்பளிப்பினை ஆட்சியாளர் வழங்கியது | 290 | 50 |

* உயர் திரு. கழக ஆட்சியாளர் அவர்கள் முத்துவிழா அன்று அளித்த நன்கொடைகள்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

பதிவு எண் : M. 4899

# கழகப் புதிய வெளியீடுகள்

## நமது உடலும் இயற்பியலும்

ஆசிரியர் : டாக்டர் லோக முத்துக்கிருட்டிணன்

இந்நூலில் நமது உடற் கூறுகளின் அமைப்புப் பற்றியும் அவற்றின் விந்தையான பணிகள் பற்றியும் கூறப்படுவதோடு இயற்பியலில் (Physics) பொறிகள் இயங்கும் முறைக்கும் நமது உடல் உறுப்புகளின் அமைப்பு இயக்கம் ஆகியவற்றுக்கு முள்ள ஒற்றுமைகள் விளக்கப்படுகின்றன. சிறுவர் படித்துப் பயன் பெறும் வண்ணம் விளக்கப் படங்களுடன் வெளி வந்திருக்கும் அழகிய பதிப்பு. ரூ. 7 50

## செய்தி இதழ்களின் கதை

ஆசிரியர் : பி. வி. கிரி

செய்தி என்றால் என்ன, செய்தித்தாள்கட்குச் செய்திகள் கிடைக்கும் முறை, செய்தித்தாள் அலுவலக நடைமுறைகள் ஆகியன இந்நூலில் இனிய எளிய தமிழில் பள்ளிச் சிறுரும் படித்துப் பயன்பெறும் வகையில் விளக்கப்பட்டுள்ளன.

ரூ. 3 50

## முருகன் திருவருள்—என்.கே. வேலன், பி.ஏ

இந்நூலில் திருமுருகப்பெருமானைப் பற்றிய பாடல்களும் முருகனின் திருவருள் பெற வழிகாட்டும் குறிப்புகளும், திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருமுருகாற்றுப் படை ஆகிய நூல்களிலிருந்து சிறந்த புகழ்ப் பாடல்களும் தொகுத்துத்தரப்பட்டுள்ளன. ரூ. 5 50

## இலக்கிய மலர்கள்-ஆசிரியர்: மீ.ப.சோமசுந்தரம் (சோமு)

தமிழிலுள்ள இனிய தனிப்பாடல்கள் சில இதன்கண் அனைவரும் படித்துத் தமிழ்ச்சுவை அறியும் வண்ணம் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. எல்லா நூலகங்களிலும் இருக்க வேண்டிய நூல்.

ரூ. 4 50

## தமிழில் எழுதுவோம்—ஆசிரியர் : ஆட்சிச் சொற்காவலர் கீ. இராமலிங்கனார், எம்.ஏ.

இவ் ஆசிரியர் 'செந்தமிழ்ச் செல்வி'யில் தொடர்பாக எழுதிவந்த கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல். இதன்கண் புதுச்சொல் செய்முறை, பொதுவகைப் பிழைகளும் அவற்றின் திருத்தமுறைகளும் - தமிழில் இயலுமா இயலாதா என்னும் வினவுக்கு விடை, இன்னபிற இன்றியமையாக் கருத்துக் களும் அடங்கியுள்ளன. பொது நூலகங்களிலும் ஆட்சித் துறை அலுவலகங்கள் அனைத்திலும் இருக்க வேண்டிய நூல்.

ரூ. 7 50

அப்பர் அச்சகம், சென்னை -1.